உ

श्री गुरुभ्यो नमः

# श्रीशङ्करभगवत्पादप्रशास्तिमञ्जरी

# ஸ்ரீ சங்கர பகவத்பாத ப்ரசஸ்திமஞ்ஜரீ

ஸ்ரீமத் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய
ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்கள்

*16வது ஆராதனை மஹோத்ஸவம் 2009*



ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராசார்ய
பூஜ்யஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்ரீ சரணர்களின்
அம்ருதோத்ஸவம்

----

ஸமர்ப்பணம்

தொகுப்பு - தமிழ் உரை

வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரீ
ஸ்ரீரங்கம்

श्री गुरुभ्यो नमः

# श्रीमदादिशङ्करभगवत्पादप्रशस्तिमकरन्दः

## मङ्गलाचरणम्

# ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாத ப்ரசஸ்தி மகரந்தம்

## "மங்களாசரணம்"

वन्दे गुरुपदद्वन्द्वमवाङ्मनसगोचरम् ।
रक्तशुक्लप्रभामिश्रमतर्क्यं त्रैपुरं महः ॥ १

குருவின் இருதிருவடிகளை வணங்குகிறேன். அது வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாதது. செவ்வொளியும், வெள்ளொளியும் கலந்தது. ஆராய இயலாத திரிபுர ஒளி அது. (1)

दयमानदीर्घनयनां देशिकरूपेण दर्शिताभ्युदयाम् ।
वामकुचनिहितवीणां वरदां सङ्गीतमातरं वन्दे ॥ २

பரிவுமிக்க நீண்டகண்களுள்ளவள், நல்வழி காட்டுகிற குருவின் வடிவில் மேலான நலனை அறிமுகப்படுத்துபவள். இடது மார்பின் மீது வீணையை வைத்திருப்பவள். விரும்பியதைத் தருபவள். ஸங்கீதத்தின் தாய். அவளை வணங்குகிறேன். (2)

दयिन्या श्रीमात्रा दहरकुहरे सूत्रधरया
समादिष्टा वाचामधिपतिषु काप्यन्यतमिका ।

मदाराध्यश्रीमद्गुरुचरणनिर्णेजनजलैः
पवित्रे जिह्वाग्रे नटति मम देवी करुणया ॥ ३

பரிவுமிக்க ஸ்ரீமாதா என் உள்ளத்து குகையில் ஸூத்ரதாரியாக அமர்ந்து தன் வாக்சக்திகளாக அருகில் அமர்ந்துள்ள வசினீ, காமேச்வரீ, மோதிநீ, விமலா, அருணா, ஜயிநீ, ஸர்வேச்வரீ, கௌலினீ என்ற எண்மரில் ஒருவளை ஏவ, என் வழிபாட்டிற்குரிய குருவின் திருவடிகளை அலம்பிய நீரால் தூயதாக்கப்பட்ட நாக்கின் நுனியில் அவள் பரிவுடன் நடனமாடுகிறாள். (3)

दण्डालग्नकराम्बुजं पदयुगश्लिष्यद्वटीपादुकं
शीर्षारोपितभक्तदत्ततुलसीबिल्वादिमालाभरम् ।
मार्गाभ्यागतसज्जनाकलितसाष्टाङ्गप्रणामोन्मिषत्
कारुण्यं हृदि भावये गुरुवरं श्रीकामकोटीश्वरम् ॥ ४

என் குருவரரான ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளை என் உள்ளத்தில் தியானிக்கிறேன். தாமரை போன்ற கைகளில் தண்ட மேந்தியவர். இருசரணங்களில் ஆலமரத்தாலான பாதுகையை இணைத்துக் கொண்டவர். பக்தரால் அளிக்கப் பெற்ற துளஸீ-பில்வமாலை முதலியவற்றைச் சிரஸில் தரிப்பவர், நடைபாதையில் கூடிய நல்லோர் செய்கிற ஸாஷ்டாங்க வந்தனத்தால் பரிவு பொங்கக் காணப்பெறுகிறுர். (4)

दयमानदीर्घनयना देशिकताभव्यदृश्यदक्षकरा ।
वामकरनिहितदण्डा गुरुमूर्तिर्मुग्धमधुरवदनाऽव्यात् ॥ ५

அழகிய இனிய முகமுள்ள குருவின் உருவம் காக்கட்டும். பரிவுமிக்க நீண்ட கண்கள் கொண்டது. நல்வழிகாட்டுகிற குருவிற்கான கரிசனம் மிக்க வலதுகரத்தை தூக்கிக் காட்டுவது; இடது கையில் தண்ட மேந்தியது. (5)

नारायणः पद्मभवो वसिष्ठः शक्तिश्च तत्पुत्रपराशरश्च ।
व्यासः शुको गौडपदो यतीन्द्रो गोविन्दयोगीति गुरुक्रमोऽयम् ॥ ६

आद्यः श्रीशङ्कराचार्यो भगवत्पादसंज्ञकः ।
अवतीर्णः शम्भुरिति प्रथितः कालटीपदे ॥ ७

सुरेश्वरः पद्मपदो हस्तामलकतोटकौ ।
सर्वज्ञश्चेति तच्छिष्याः प्रथिता गुरुसन्निभाः ॥ ८

शङ्करः कामकोट्याख्यं पीठं काञ्च्यां व्यराजयत् ।
प्रत्यस्थापयदद्वैतं पीठे सर्वज्ञके स्थितः ॥ ९

आत्मानमनु सर्वज्ञं सुरेश्वरमते स्थितम् ।
गोप्तारं कामकोट्याख्यपीठस्य व्यदधाद्गुरुः ॥ १०

तदाद्येन्द्रसरस्वत्याख्याऽविच्छिन्ना परम्परा ।
पाति नो गुरुवर्याणां शारदामठ सुस्थिता ॥ ११

अष्टषष्टितमाचार्यः शङ्करश्चन्द्रशेखरः ।
विराजते ब्रह्मभूतः स्वं बृन्दावनमास्थितः ॥ १२

अपारकरुणामूर्तिं ज्ञानदं शान्तरूपिणम् ।
श्रीचन्द्रशेखरगुरुं प्रणतोऽस्मि मुदाऽन्वहम् ॥ १३

श्रीशङ्करार्यमपरं श्रीशिवाशिवरूपिणम् ।
पूज्यश्रीकामकोट्याख्यपीठगं तं दयानिधिम् ॥ १४

परित्यज्य मौनं वटाधःस्थितिं च व्रजन्भारतस्य प्रदेशात्प्रदेशम् ।
मधुस्यन्दिवाचा जनान्धर्ममार्गे नयन् श्रीजयेन्द्रो गुरुर्भाति चित्ते ॥ १५

नमामि शङ्करान्वाख्यविजयेन्द्रसरस्वतीम् ।
श्रीगुरुं शिष्टमार्गानुनेतारं सन्मतिप्रदम् ॥ १६

कलये भगवत्पादशङ्करं प्राच्यवाक्सुमैः ।
क्लृप्तैर्यथामतिरुचि ग्रथितैर्भक्तितन्तुभिः ॥ १७

நாராயணன், பிரும்மா, வஸிஷ்டர், சக்தி, அவரது புதல்வர் பராசரர், வியாஸர், சுகர், துறவரசரான கௌடபாதர், கோவிந்தயோகீ என இந்த குரு பரம்பரை. காலடியில் அவதரித்த சிவன் எனப்புகழ் பெற்று, பகவத்பாதர் எனக்குறிப்பிடப் பெற்ற ஆதி ஸ்ரீ சங்கராசாரியர் அவரது சிஷ்யர்களான ஸுரேச்வரர், பத்மபாதர், ஹஸ்தாமலகர், தோடகர், ஸர்வஜ்ஞர் என குருவிற்கு இணையானவர்கள். சங்கரர் காஞ்சியில் காமகோடி என்ற பீடத்தை விளங்கச் செய்தார். ஸர்வஜ்ஞபீட மேறி அமர்ந்து அத்வைதத்தை நிலை நாட்டினார். தன்னைத் தொடர்ந்து ஸுரேசுவரரின் மேற்பார்வையில் உள்ள ஸர்வஜ்ஞரை காமகோடி பீடத்தின் காப்பாளராக அமைத்தார். அவரைத் தொடர்ந்து ''இந்திர ஸரஸ்வதி'' என்ற இணைப்பெயர் கொண்ட ஆசார்யபரம்பரை தொடர்கிறது. சாரதா மடத்தில் நன்கு அமர்ந்து அது நம்மை காப்பாற்றுகிறது. அதன் 68வது ஆசாரியரான ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ சந்திரசேகரர் தன் பிருந்தாவனத்தில் நிலைபெற்றவராகத் துலங்குகிறார். எல்லையற்ற கருணையின் வடிவானவரும் பேரறிவு அளிப்பவரும் அமைதியே உருவான வருமான அந்த ஸ்ரீ சந்திரசேகர குருவை உள்ளநிறைவுடன் நாள்தோறும் வணங்குகிறேன். அவர் மற்றொரு சங்கராசார்யர். சிவையும் சிவனுமானவர். வழிபாட்டிற்குரிய காமகோடி பீடத்தில் அமர்ந்திருந்தவர். தயையின் இருப்பிடம். மௌனத்தையும் ஆலமரத்தடி இருப்பையும் விட்டுப் பாரதத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் சென்று, தேன் சொட்டும் வாக்கால் மக்களை அறவழியில் கொணர்கிற ஸ்ரீ ஜயேந்திர குரு என் உள்ளத்தில் துலங்குகிறார். பண்பட்ட நல்லோருக்கு நல்லறிவூட்டி நல்வழிகாட்டி அழைத்துச் செல்கிற ஸ்ரீ குரு ஸ்ரீ சங்கர விஜயேந்திர ஸரஸ்வதியை வணங்குகிறேன். பகவத் பாத சங்கரரை நம் முன்னோர்களின் வாக்காகிற பூக்களை என் அறிவிற்கும் ருசிக்குமேற்றவாறு பக்தி என்ற நூலில் மாலையாகக்கட்டி, உள்ளத்தில் அலங்கரிக்கிறேன். (6-17)

## श्रीगुरुपादुकावन्दनम्

जगज्जनिस्थेमलयालयाभ्यां अगण्यपुण्योदयभावितोभ्याम् ।
त्रयीशिरोजातनिवेदिताभ्यां नमो नमः श्रीगुरुपादुकाभ्याम् ॥ १८

विपत्तमस्स्तोमविकर्तनाभ्यां विशिष्टसंपत्तिविवर्धनाभ्याम् ।
नमज्जनाशेषविशेषदाभ्यां नमो नमः श्रीगुरुपादुकाभ्याम् ॥ १९

समस्तदुस्तर्ककलङ्कपङ्कापनोदनप्रौढजलाशयाभ्याम् ।
निराश्रयाभ्यां निखिलाश्रयाभ्यां नमो नमः श्रीगुरुपादुकाभ्याम् ॥ २०

तापत्रयादित्यकरार्दितानां छायामयीभ्यामतिशीतलाभ्याम् ।
आपन्नसंरक्षणदीक्षिताभ्यां नमो नमः श्रीगुरुपादुकाभ्याम् ॥ २१

यतो गिरोऽप्राप्य धिया समस्ताः ह्रिया निवृत्ताः सममेव नित्याः ।
ताभ्यामजेशाच्युतभाविताभ्यां नमो नमः श्रीगुरुपादुकाभ्याम् ॥ २२

### "ஸ்ரீ குரு பாதுகா வந்தனம்"

ஸ்ரீ குருவின் இருபாதுகைகள், உலகின் தோற்றம், காப்பு மற்றும் லயம் செய்பவை. எண்ணற்ற புண்யச் செயலின் பலனாக உள்ளத்தில் கொள்ளப் பெறுபவை. உபநிஷத்துகளால் உணர்த்தப் பெற்றவை. அவற்றிற்கு வணக்கம், வணக்கம்.

விபத்து என்ற இருளை விலக்குகிற ஸூர்யனானவை. சிறந்த செழிப்பைத் தருபவை, வணங்குகிற மக்களைச் சிறப்படையச் செய்பவை. அந்த குரு பாதுகைகளுக்கு வணக்கம், வணக்கம்.

வீண் சர்ச்சை என்கிற சேற்றை அலம்புவதில் தேர்ந்த நீர் நிலையானவை, தனக்கெனச் சார்பிடம் கொள்ளாமல் அனைவருக்கும் புகலிடம் தருபவை. அந்த குரு பாதுகைகளுக்கு வணக்கம், வணக்கம்.

ஆத்யாத்மிக - ஆதிதைவிக- ஆதிபௌதிக தாபங்களாகிய சூர்ய வெப்பத்தல் வாடியவருக்கு நிழலாகிக் குளிர்ச்சி தருபவை.

புகலமைந்தவரைக் காப்பதில் முனைந்தவை. அந்த குரு பாதுகைகளுக்கு வணக்கம், வணக்கம்.

வேதவாக்யங்கள் இவற்றை அறிவால் நெருங்க இயலாமல் அனைத்தும் ஒருங்கே வெட்கித் திரும்பி விட்டன. மும்மூர்த்திகளாலும் வணங்கப் பெற்ற குரு பாதுகைகளுக்கு வணக்கம், வணக்கம். (குரு பாதுகா பஞ்சகம்.) (18-22)

वन्दे गुरूणां चरणारविन्दे सन्दर्शितस्वात्मसुखावबोधे ।
जनस्य ये जाङ्गलिकायमाने संसारहालाहलमोहशान्त्यै ॥ २३

श्रीगुरुचरणद्वन्द्वं वन्देऽहं मथितदुस्सहद्वन्द्वम् ।
भ्रान्तिग्रहोपशान्तिं पांसुमयं यस्य भसितमातनुते ॥ २४

स्वामिन्नमस्ते नतलोकबन्धो कारुण्यसिन्धो पतितं भवाब्धौ ।
मामुद्धरात्मीयकटाक्षदृष्ट्या ऋज्व्यातिकारुण्यसुधाभिवृष्ट्या ॥ २५

குருவின் திருவடிகளை வணங்குகிறேன். அவை ஆத்மானந்தத்தை எளிதில் உணரச் செய்பவை. பிறப்பிறப்புத் தொடர் என்ற ஹாலாஹல விஷத்தீண்டலால் நேர்ந்த மோகம் அடங்க விஷவைத்யனுக உதவுபவை. (யோக தாராவளீ) இன்பம், துன்பம், துயரம், கலக்கம் முதலிய இரட்டைகளை அகற்றுகிற ஸ்ரீ குருவின் இருசரணங்களை வணங்குகிறேன். அதன் தூசியாகிய திருநீர் பிரமை என்ற கிரகதோஷத்தை அடக்குகிறது. (ஸ்வாத்ம நிருபணம்) குருஸ்வாமி! வணங்குகிற மக்களின் உற்ருரே! கருணைக் கடலே! நான் பிறவிக்கடலில் விழுந்துள்ளேன். உமது நேர்மைமிக்க கருணை அமுதம் பொழிகிற கடாக்ஷப் பார்வையால் கறையேற்றுவீர். (விவேக சூடாமணி) (23-25)

## देववन्दनम्

सदा बालरूपापि विघ्नाद्रिहन्त्री महादन्तिवक्त्रापि पञ्चास्यमान्या ।
विधीन्द्रादिमृग्या गणेशाभिधा मे विधत्तां श्रियं कापि कल्याणमूर्तिः ॥ २६

पुस्तकजपवटहस्ते वरदाभयचिह्नचारुबाहुलते ।
कर्पूरामलदेहे वागीश्वरि शोधयाशु मम चेतः ॥ २७

**தேவவந்தனம்** - எப்போதும் சிறுவனுகக் காட்சி தருபவர். ஆனுல் மலை போன்ற தடைகளைச் சிதறச் செய்பவர், பெரும் யானை முகத்தோன். ஆயினும் பஞ்சாஸ்யனுல் (சிங்கத்தால் - சிவனுல்) மதிக்கப் பெறுபவர். பிரும்மா, இந்திரன் முதலானோரால் தேடப் பெறுபவர், எனினும் கணத்தின் (கூட்டத்தின்) முன் நிற்கிற தலைவர், அப்படியொரு அந்த மங்கள மூர்த்தி சீரும், சிறப்புமளிக்கட்டும். (ஸுப்ரமண்ய புஜங்கம்). புஸ்தகமும் ஜபமாலையும் கைகளில் ஏந்தியவளே ! வரத - அபய முத்ரை தாங்குகிற கைகளுள்ளவளே ! கர்பூரம் போன்ற தூயமேனியளே ! வாக்கை ஆள்பவளே ! என் உள்ளத்தை மாசற்றதாக்குவாய். (புவநேச்வரீஸ்துதி. பிரபஞ்சஸாரம்) (26-27)

## वेदान्ताचार्यवन्दना

आदौ शिवस्ततो विष्णुः ततो ब्रह्मा ततः परम् ।
वसिष्ठश्च ततः शक्तिः ततः षष्ठः पराशरः ॥ २८

ततो व्यासः शुकः पश्चाद्गौडपादाभिधस्ततः ।
गोविन्दार्यगुरुस्तस्माच्छङ्कराचार्यसंज्ञकः ॥ २९

पद्मपादः सुरेशश्च हस्तामलकतोटकौ ।
वेदान्तशिक्षागुरव आचार्याः पान्तु मां सदा ॥ ३०

—हुल्सूच् कोशतः

**வேதாந்த ஆசாரிய வந்தனே** - ஆதியில் சிவபெருமான், பின் விஷ்ணு, அதன் பின் பிரும்மா, வஸிஷ்டர், சக்தி, பராசரர், வியாஸர், சுகர், கௌடபாதர், கோவிந்தார்ய குரு, சங்கராசாரியர், பத்மபாதர், ஸுரேசர், ஹஸ்தாமலகர், தோடகர் என்ற வேதாந்தப் பயிற்சி தந்த குருக்களான ஆசாரியர்கள் என்னே எப்போதும் காக்கட்டும் (ஹுல்ச் கோசம்) (28-30)

## श्री गुरुपरम्पराध्यानम्

सदाशिवसमारम्भां शङ्कराचार्यमध्यमाम् ।
अस्मदाचार्यपर्यन्तां वन्दे गुरुपरम्पराम् ॥ ३१

नारायणं पद्मभुवं वसिष्ठं शक्तिश्च तत्पुत्रपराशरं च ।
व्यासं शुकं गौडपदं महान्तं गोविन्दयोगीन्द्रमथास्य शिष्यम् ॥ ३२

श्रीशङ्कराचार्यमथास्य पद्मपादं च हस्तामलकं च शिष्यम् ।
तं तोटकं वार्तिककारमन्यानस्मद्गुरून् सन्ततमानतोऽस्मि ॥ ३३

**"ஸ்ரீ குரு பரம்பரா தியானம்"** - ஸதாசிவரில் தொடங்கியதும் சங்கராசாரியரை நடுவில் கொண்டதும் நம் ஆசாரியர் வரை உள்ளதுமான குரு பரம்பரையை வணங்குகிறேன்.

நாராயணர், பிரும்மா, வஸிஷ்டர், சக்தி அவரது புதல்வர் பராசரர், வியாஸர், சுகர், மஹானை கௌடபாதர், கோவிந்தயோகீந்திரரும் அவரது சிஷ்யரான ஸ்ரீ சங்கராசார்யரும், அவரது சிஷ்யர்களான பத்மபாதர், ஹஸ்தாமலகர், தோடகர் வார்த்திகம் எழுதிய ஸுரேச்வரர் என நம் குருக்களே எப்போதும் வணங்கி நிற்கிறேன். (31-33)

*श्रीसदाशिवब्रह्मेन्द्रसरस्वतीरचिता जगद्गुरुरत्नमाला*

यदबोधवशादहं ममेदं तदिहेत्यादिरुदेति भूतिभेदः ।
तदखण्डमनन्तमद्वितीयं परमानन्दमयं पदं श्रयेयम् ॥ ३४

ஸ்ரீ ஸதாசிவபிரும்மேந்திர ஸரஸ்வதீ இயற்றிய ஜகத்குரு ரத்னமாலா - பரமானந்தப் பெருநிலையான அதனை அண்டி நிற்போம். அதனை அறியாததால் ''நான்'' ''இது என்னுடையது'' என்ற அளவற்ற வேறுபாடு தோன்றுகிறது. அது துண்டாட இயலாதது. முடிவற்றது. இரண்டாவதெனக் குறிப்பிட ஏதுமில்லாது. (34)

वटपादपमूलपट्टभद्रं स्फुटचिन्मुद्रमुदूढमौनमुद्रम् ।
कलितेन्दुकलं कृपासमुद्रं कलये कञ्चन देशिकं विनिद्रम् ॥ ३५

ஆலமரத்தடியில் அமர்ந்த மங்களப் பொருள். சின்முத்ரை அப்பட்டமாகத் துலங்க, மௌன முத்திரைஏற்றவரும், பிறைசூடியும் கருணைக்கடலும், அயர்வற்றவருமான ஒரு தேசிகரை - தக்ஷிணா மூர்த்தியை உள்ளத்தில் காண்கிறேன். (35)

कमलाकुचकुम्भकुङ्कुमश्रीकलितोरःस्थलमप्यरागयोगम् ।
करवै मुरवैरिणं महान्तं करुणार्द्रं हृदये कविं पुराणम् ॥ ३६

முரனின் எதிரியானவர், மிகப்பெரியவர், கருணையால் உருகிநிற்பவர், லக்ஷ்மீயின் மார்பகத்துக் குங்குமப் பூச்சால் மார்பின் நடுவில் சிவந்தவர். ஆனால் காமமற்றவர். அந்த பழமைக்கும் பழைய அவரை விஷ்ணுவை மனத்தில் தியானிக்கிறேன். (36)

गरुडाङ्कगभीरनाभिपद्मोदरभूगह्वरनिष्ठनैष्ठिकाग्र्यम् ।
चतुराननमाश्रयामि कामं चतुराम्नायवदावदं सदापि ॥ ३७

கருடனை அடையாளமாகக் கொண்டவரின் ஆழ்ந்த நாபித் தாமரையில் உறைந்துள்ள நிஷ்டை கூடியவரில் சிறந்தவரும் எப்போதும் நான்கு வேதங்களின் இருப்பிடமுமான நான்முகரை நன்கு அண்டி நிற்கிறேன். (37)

कुशिकप्रभवास्त्रशस्त्रपालीप्रशमाचार्यकसिद्धहस्तदण्डम् ।
शमवन्तमरुन्धतीसहायं शरणं यामि वसिष्ठमप्रमेयम् ॥ ३८

குசிகரின் புதல்வரான விசுவாமித்ரரின் அஸ்திர - ஆயுதவரிசையை அடக்குவதில் ஆசானான தண்டத்தைக் கையில்

கொண்டவரும் மனவடக்கம் மிக்கவரும் அருந்ததியின் துணேவரும் மதிப்பிட இயலாதவருமான வஸிஷ்டரை சரணடைகிறேன். (38)

बहुमित्रसहक्षितीशपापापहसान्निध्यमरोध्यसत्प्रतापम् ।
महदश्चितमन्त्रतन्त्रशक्तिं मनसा शक्तिमुपैमि सद्भिरक्तिम् ।। ३९

(அடுத்து) பற்றற்றவரில் சிறந்த சக்தியை உள்ளத்தால் சென்றடைகிறேன். மித்ரஸஹன் என்ற அரசனின் பல பாபச் செயல்களைப் பொறுத்தருளியவர். தடுக்க இயலாத பேராற்றல் மிக்கவர். மஹானன வஸிஷ்டரிடமிருந்து மந்திர - யந்திர சக்தி பெற்றவர். (மித்ரஸஹன் என்ற வஸிஷ்ட சிஷ்யன் - அரசன். சாபத்தால் அரக்கனுகி சக்தியைத் துன்புறுத்தியவன். அவனே மந்திர பலத்தால் வென்று, அடக்கி மந்திரோபதேசத்தால் சாபநிலே நீக்கி அருளியவர் சக்தி ருஷி). (39)

पवनाकुलकाशलेशकल्पं प्रभवादेव पराहताशराशम् ।
प्रणमामि पराशरं मुनीनां प्रचरद्वैष्णवसंहिताप्रकाशम् ।। ४०

(அடுத்து) பராசரரை வணங்குகிறேன். எதிரியைப் புறமுதுகு காட்டச் செய்கிற தவவலிமையை தாயின் கருவிலிருந்தபோதே காட்டியவர். நாணல் செடியைப் பேய்க் காற்று ஆட்டுவிப்பது போல் அரக்கனின் ஆசையை முறியடித்தவர், முனிவர் தலேவர். உலகில் புகழ்பெற்ற விஷ்ணு புராணத்தை இயற்றியவர். (பராசரர் தாயின் கருவிலிருந்த போது மித்ரஸஹ அரக்கன் துன்புறுத்தி மாய்க்க முனேந்த போது, தாயையும் தன்னேயும் கருவிலிருந்தே காத்துக் கொண்டவர்.) (40)

निगमानपि योऽन्वशाच्चतुर्धा व्यधिताष्टादशधापि यः पुराणम् ।
स च सात्यवतेय ईप्सितं मे सकलाम्नायशिरोगुरुर्विधत्ताम् ।। ४१

வேதங்களே நான்காக வகுத்தார். புராணங்களே 18 ஆக இயற்றினுர். ஸத்யவதியின் புதல்வரான வியாஸர் உபனிஷத்தனேத்தின் ஆசாரியர். அவர் நம் விருப்பத்தை நிறைவேற்றட்டும். (41)

जननीजठरादिव च्यवन् यो जगतो नाद्रवदात्मविद् विपद्भ्यः ।
अनहन्तमहं तमात्मवन्तं भगवन्तं शुकमाश्रये प्रशान्तम् ॥ ४२

தாயின் வயிற்றிலிருந்து நழுவியது போலவே ஸம்ஸாரக் கட்டாகிற உலக கூட்டிலிருந்து (ஆத்மாவின் சுயநிலையை உணரத் தடையாயிருந்த உலகிலிருந்து) நழுவியவர். அவற்ருல் நேர்கிற சோகமோஹங்களிலிருந்து விடுபட்டவர், அகந்தையற்றவர். ஆத்மாவை உணர்ந்தவர். அமைதி மிக்கவர், அந்த சுகரைச் சரணடைகிறேன். (42)

अभियुञ्जदयार्च्यपूज्यपादान् अपलून्यादिनिषाक सिद्धनेतॄन् ।
अथ गौडपदान् फणीशभाष्यप्रथमाचार्यकपण्डितान्प्रपद्ये ॥ ४३

பதஞ்ஜலியின் பாஷ்யத்தைப் போதித்த முதல் பேரறிஞரான கௌடபாதரைச் சரணடைகிறேன். (புத்தமதத்தினரான) அயார்ச்யர் முதலியவரை வாதில் வென்று அவர்களால் திருவடி வணங்கப் பெற்றவர். அபலூன்யர் முதலான ஸித்தர்களுக்கு ஆத்ம வித்யையைப் போதித்து அவர்களின் தலைவரானவர். (43)

हरितल्प-हरांघ्रिनूपुर-क्ष्माधर-सौमित्रि-बलात्रिपुत्रलक्ष्मा ।
जयतादुपरेवमात्तधामा जयगोविन्दमुनिः स चन्द्रनामा ॥ ४४

விஷ்ணுவின் படுக்கை, சிவனது சிலம்பணி, பூமியைத் தாங்குபவர், லக்ஷ்மணர், பலராமர், பதஞ்சலி என்ற பல உருவங்களைத் தாங்கியவர், ரேவா நதியருகே வசித்தவர். இந்த ஜய கோவிந்தமுனி என்ற கோவிந்த பகவத் பாதர், முன் சந்திர சர்மா எனப்பெயர் கொண்டவர். அவர் விளங்கட்டும். (44)

कलिना बलिनाऽखिले खिलेऽपि स्खलिते श्रौतपथेऽपथे प्रवृद्धे ।
जपहोमतपस्सु नामशेषेष्वपि यातेषु सुभाषितेषु शोषम् ॥ ४५

जिनबुद्धकपालिशक्तिवह्नीन्द्विनसेवासु समन्ततः श्रितासु ।
शिथिले द्विजवेदवेदिवादे प्रथिते चाद्वयवेद्यबाह्यमोदे ॥ ४६

जगदीक्षणविह्वलामृतान्धोनिगदव्यक्तकृपारसानुबन्धम् ।
प्रणिदिश्य गुहं पुरैव गन्तुं प्रणिबन्धुं च मखान् द्विषश्च यन्तुम् ॥ ४७

अवतार्य सुरान् परांश्च पूर्वं विधिविष्णिवन्द्रमुखान् विनोदपूर्वम् ।
स्वयमप्यवतीर्य सुत्युरार्याकमितुः श्रीशिवशर्मणो विचार्य ॥ ४८

उदभूत्सदने निटालदृग्यो मदभाजां सुधियां प्रमाथयोग्ये ।
शिशुरर्पयतान्मुमुक्षुभाग्यं स शुभं शङ्करदेशिकः सुभोग्यम् ॥ ४९

வலிவுமிக்க கலியால் எல்லாம் சிதற, வேதநெறி தடுமாற துர்மார்க்கம் பரவ, ஜபமும், ஹோமமும், தவமும் பெயரளவில் துலங்க, நல்லுரைகள் வரண்டுபோக, ஜினரும், புத்தரும், காபாலிகரும், சாக்தரும் பெருக, அக்னி, சந்திரன் மற்றும் ஸூரியனது வழிபாடு எங்கும் பரவ, அந்தணர் முதலிய வேதமறிந்தவரின் சொல் வலிவிழக்க, வேதநெறிக்கு மாறுனவரின் வழி புகழ்பெற, உலகைக் கண்டு தளர்ந்த தேவர்களிடம் வெளிப்பட்ட கருணையின் தொடர்பால் குஹனைத் தனக்கு முன்னரே பூவுலகில் வேள்வி புரிந்து, வேள்வியை எதிர்ப்பவரை அழிக்க அனுப்பி, பிரும்மா, விஷ்ணு, இந்திரன் முதலானோரையும் அனுப்பிவிட்டுத் தானும் ஆர்யாம்பிகையின் கணவரான சிவசர்மா (சிவகுரு) வின் புதல்வனாக நெற்றிக் கண்ணரான சிவன் மதம் பிடித்த அறிஞர்களை அடக்கவல்ல அவரது வீட்டில் தோன்றினார். முக்தி நாடுபவரின் பாக்யமானவர். அந்த சங்கராசாரியர் நமக்கு நன்கு அனுபவிக்கத்தக்க மங்களத்தை வழங்கட்டும். (45-49)

उपनीय दिवं गते स्वताते व्यपदिश्यागमसङ्ग्रहेऽप्यतीते ।
निजमातरमन्वमीमनद्यो नियमाप्तिं स मुदे ममास्तु सद्यः ॥ ५०

தனக்கு உபநயனம் செய்வித்த தந்தை வானுலகம் சென்றதும் வேதம் முதலியதன் பயிற்சி முடிந்ததும் தன் தாயைத் தான் துறவேற்க அனுமதிக்கச் செய்தவர் எனக்கு ஆனந்தமளிக்கட்டும். (50)

प्रतिचन्द्रभवं निवृत्तिधर्मा श्रितगोविन्दमुनेरवाप्तधर्मा ।
जयतात्कृतसूत्रभाष्यकर्मा स्वयमन्तेवसतां वितीर्णशर्मा ॥ ५१

துறவேற்று நர்மதைக் கரையில் கோவிந்த முனிவரிடம் உபதேசம் பெற்று ஸூத்ரபாஷ்யம் எழுதித் தன்னிடம் கற்க வந்த மாணவருக்கு நலம் புரிந்த சங்கரர் துலங்கட்டும். (51)

कुहनान्त्यजविश्वनाथसृष्टो द्रुहिणव्यासवरोदितानुशिष्टः ।
ममतां मम तावदेष भिन्द्यात् नमतश्चोपरतिं ददात्वनिन्द्याम् ॥ ५२

மாயையால் சாண்டாள வேஷமேற்ற விசுவநாதரின் அருள் பெற்றவரும், பிரும்மா மற்றும் வியாஸரின் வரத்தால் ஆயுள் வரை நீட்டப் பெற்றவருமான சங்கரர் வணங்கி நிற்கிற எனது மமதையை நீக்கி குறைகூற முடியாத போதுமென்ற மனத்தை (பற்றின்மையை) அளிக்கட்டும். (52)

अपि हालनृपालपालितं द्रागपहायेन्द्रहरिन्मुखं वितन्द्रम् ।
श्रितमुर्मुरमुद्धरंस्त्रिवेण्यां यतिराड् भट्टमघानि वो वितृण्यात् ॥ ५३

ஹாலன் என்ற மகத அரசனால் பாலிக்கப் பெற்ற கிழக்கு திக்கைக் கடந்து, பிராயச் சித்தம் செய்து கொண்டிருக்கிற பட்டரைக் கரையேறச் செய்த துறவரசர் நம் பாபத்தைப் போக்கட்டும். (53)

पटुमण्डनमिश्रखण्डनार्थं प्रविशन् पद्मवनं नवं जयार्थी ।
तमधृष्यगिरं विधृष्य वादैर्यतिमाधात्स च पातु मां प्रमोदी ॥ ५४

प्रविशन्बदरीमवाप्य सद्यः परमाचार्यपदार्चनं क्रमाद्यः ।
धवलाचलमाप्य योऽप्यमाद्यच्छिवलावण्यमुदीक्ष्य तं प्रपद्ये ॥ ५५

प्रतिपादितलिङ्गपञ्चकेऽमुं प्रणिवर्त्याशु तिरोहिते गिरीशे ।
विनिवृत्य स दिग्जयप्रवृत्तो विविधैः शिष्यवरैर्विभातु चित्ते ॥ ५६

ஆற்றல்மிக்க மண்டனமிச்ரரை வாதில் வெல்ல விரும்பி புதிய பத்மவனம் என்ற அந்தணர் குடியிருப்பில் நுழைந்து எதிர்க்க இயலாத வாக்கு வன்மை பெற்ற அவரை வாதில் வென்று துறவியாக்கி ஆனந்த மடைந்த சங்கரர் என்னைக் காக்கட்டும். (54)

பதரியில் நுழைந்து பரம குருவான கௌடபாதரின் திருவடிகளை வழிபட்டு, வெள்ளி மலை சென்று சிவனைக் கண்டு மயங்கி நின்ற குருவைச் சரணடைகிறேன். (55)

ஐந்து லிங்கங்களை அளித்து இவரைத் திருப்பி அனுப்பிவிட்டுச் சிவன் மறைந்ததும் பல சிஷ்யர்களுடன் திக்விஜயத்திற்குக் கிளம்பிய சங்கரர் என் உள்ளத்தில் துலங்கட்டும். (56)

कलयन्निलयं च तुङ्गभद्रातटिनीरोधसि वेधसः स्त्रिया द्राक् ।
कतिचिच्छरदोऽत्यवाहयद्यो यतिराट् क्वापि मठे स मेऽस्तु सद्यः ॥ ५७

பிரும்மாவின் பத்னியான சாரதாவிற்கு துங்கபத்திரைக் கரையில் ஆலயமமைத்து அங்கு ஒரு மடத்தில் சில நாட்களைக் கழித்த துறவரசர் என்னுடையவராகட்டும். (57)

अथ कान्यकुमारसन्धिसेतुस्थलिनीवेङ्कटकालहस्तियातुः ।
यमिनेतुरमुष्य काञ्चियात्रा शमिदानीं शमदं क्रियाद् विचित्रा ॥ ५८

அதன் பின் கன்யாகுமாரி, திருச்செந்தூர் ராமஸேது உள்ள இடம் திருப்பதி மற்றும் காளஹஸ்திக்குச் சென்ற துறவரசரின் விசித்ரமான காஞ்சி யாத்திரை மனஅடக்கத்தையும் மங்களத்தையும் எப்போதும் அளிக்கட்டும். (58)

श्रितनिर्मलराजसेनचोलक्षितिपालोद्धृतविप्रदेवशालः ।
वरदस्य तथाऽऽम्रनायकस्याप्युरुवेश्मद्वयकृज्जयाय मे स्यात् ॥ ५९

தன்னை அண்டி நிற்கிற ராஜஸேனன் என்ற சோழ அரசனைக் கொண்டு அந்தணர் குடியிருப்பையும் வரதருக்கும் ஏகாம்பர நாதருக்கும் இருபெரும் கோவில்களையும் கட்டச் செய்த ஆசாரியார் எனக்கு வெற்றி அளிக்கட்டும். (59)

प्रकृतिं च गुहाश्रयां महोग्रां स्वकृते चक्रवरे प्रवेश्य योऽयम् ।
अकृताश्रितसौम्यमूर्तिमार्यां सुकृतं वः स चिनोतु शङ्करार्यः ॥ ६०

குகையிலிருந்த உக்ரமான மூலசக்தியை தான் அமைத்த சிறந்த சக்ரத்தினுள் பிரவேசமடையச் செய்து அண்டியவரிடம் அருளால் குளிர்ந்தவளாகக் காமாக்ஷியை (ஆர்யாவை) அமைத்த சங்கரர் நம் புண்யம் பெருகச் செய்யட்டும். (60)

परकीयवपुःप्रवेशशैल्या स्मरतन्त्राणि विदन् वशी न लौल्यात् ।
अधितातनुभारतीं वशे यः सुकृतं मे सुतरां गुरुः स चीयात् ॥ ६१

புலன்களைத் தன் வசத்தில் கொண்டு சபலமின்றி பிறரது உடலில் நுழைந்து காம தந்திரத்தை அறிந்து உபயபாரதியைத் தன் வசப்படுத்திய குரு என் புண்யம் சேமிக்கப் பெற உதவட்டும். (61)

उपयात्सु बुधेषु सर्वदिग्भ्यः प्रदिशन्नाशु पराभवं य एभ्यः ।
विधृताखिलवित्पदश्च काञ्च्यामधृतार्तिः स दिशेच्छ्रियं च कांचित् ॥ ६२

நான்கு திக்குகளிலிருந்து வந்த அறிஞர்களை வாதில் வென்று தன் ஸர்வஜ்ஞநிலையை உறுதிப்படுத்தி ஸர்வஜ்ஞபீட மேறியவர் நமக்குச் சீரை அளிக்கட்டும். (62)

अधितिष्ठिपदाहिमाद्रिसेव्यं क्रमशो धर्मविचारणाय दिव्यम् ।
अधिकाञ्चि च शारदामठं योऽभ्यधिकं नस्सुखमातनोतु सोऽयम् ॥ ६३

தர்மத்தை நிலை நிறுத்த இமயம் வரை வரிசையாகப் பீடங்கள் அமைத்து காஞ்சியில் சாரதாமடத்தை அமைத்த சங்கரர் நமக்குப் பேரின்பமளிக்கட்டும். (63)

पृथिवीधवपद्मपादहस्तामलकानन्दगिरीनतिप्रशस्तान् ।
चतुरोऽकृत यश्चतुर्षु पीठेष्वतुलां नश्चतुरो मुदं स देयात् ॥ ६४

பிருதிவீதவரையும், பத்மபாதரையும், ஹஸ்தாமலகரையும் ஆனந்த கிரியையும் (நான்கு புகழ்பெற்ற சிஷ்யர்களையும்) நான்கு பீடங்களில் அமர்த்திய சங்கரர் நமக்கு ஆனந்தமளிக்கட்டும். (64)

परमन्तिकसत्सुरेश्वराद्यैः परमाद्वैतमतं स्फुटं प्रवेद्य ।
परिकाञ्चिपुरं परे विलीनः परमायास्तु शिवाय सद्गुरुर्नः ॥ ६५

மிகவும் நெருங்கியுள்ள நல்லோரான ஸுரேச்வரர் முதலானோரைக் கொண்டு மேலான அத்வைத மதத்தை தெளிவுடன் போதிக்கச் செய்து காஞ்சீபுரத்தில் பரம்பொருளிடம் லயமடைந்த நல்ல குரு மேலான மங்கள நிலையை அளிக்கட்டும். (65)

## तोटकाष्टकम्

''विदिताखिलशास्त्रसुधाजलधे महितोपनिषत्कथितार्थनिधे ।
हृदये कलये विमलं चरणं भव शङ्करदेशिक मे शरणम् ॥ ६६

சங்கரரே ! நல்வழி காட்டுபவரே ! சாஸ்திரங்கள் அனைத்துமாகிற அமுதக்கடலை உணர்ந்தவரே! பெருமதிப்புக்குரிய உபநிஷத்துகள் கூறிய பொருட்களின் பொக்கிஷமே ! உமது மாசற்ற திருவடியை என் உள்ளத்தில் தியானிக்கிறேன். எனக்குப் புகலிடமாவீர் ! (66)

करुणावरुणालय पालय मां भवसागरदुःखविदूनहृदम् ।
रचयाखिलदर्शनतत्त्वविदं भव शङ्कर देशिक मे शरणम् ॥ ६७

கருணைக் கடலே ! பிறவிக் கடலில் மூழ்கித் துயருற்று வாடிய உள்ளமுள்ள என்னைக் காப்பாற்றுவீர் ! சாஸ்திரங்களனைத்தின் உட்பொருளை உணர்ந்தவனாக்குவீர் ! நல்வழி காட்டுகிற சங்கரரே ! எனக்குப் புகலிடமாவீர் ! (67)

भवता जनता सुहिता भविता निजबोधविचारणचारुमते ।
कलयेश्वरजीवविवेकविदं भव शङ्कर देशिक मे शरणम् ॥ ६८

உம்மால் மக்கள் கூட்டம் நன்மையடையட்டும் ! தன்னை (ஆத்மாவை) அறிந்து ஆராய்வதில் அழகுற்ற அறிவாளரே ! என்னை ஈச்வரனையும் ஜீவனையும் ஆராய்ந்து உணர்ந்தவனாக்குவீர் ! நல்வழி காட்டுகிற ஆசாரியரே ! எனக்குப் புகலிடமாவீர். (68)

भव एव भवानिति मे नितरां समजायत चेतसि कौतुकिता ।
मम वारय मोहमहाजलधिं भव शङ्करदेशिक मे शरणम् ॥ ६९

என் உள்ளத்தில் அந்த சிவனே (உலகைத் தோற்றுவிப்பவரே) நீர் தான் என ஒரு ஆர்வம் பூர்ணமாக எழுந்துள்ளது. என் மதிமயக்கமெனும் பெருங்கடலை கரை கடக்காமல் தடுத்து நிறுத்துவீர். நல்வழி காட்டி மங்களம் புரிபவரே! என் புகலிடமாவீர்! (69)

सुकृतेऽधिकृते बहुधा भवतो भविता समदर्शनलालसता ।
अतिदीनमिमं परिपालय मां भव शङ्करदेशिक मे शरणम् ॥ ७०

(என்) புண்ணியம் பலன் தரத்தொடங்கியதும் உமக்கு ஸமமாகக் காண்பதில் ஆர்வம் ஏற்படும். பெரிதும் இரங்கத் தக்கவனுன என்னை நன்கு காப்பீர்! நல்வழி காட்டுகிற சங்கரரே! எனக்குப் புகலிடமாவீர்! (70)

जगतीमवितुं कलिताकृतयो विचरन्ति महामहसश्छलतः ।
अहिमांशुरिवात्र विभासि गुरो भव शङ्करदेशिक मे शरणम् ॥ ७१

பேரொளி கொண்டவரான பெரியோரும் தன் உண்மைநிலையை மறைத்து வடிவமேற்று (உலகில்) நடமாடுகின்றனர். குருவே! நீர் ஸூரியனைப் போல் துலங்குகிறீர். நல்வழி காட்டுகிற சங்கரரே! எனக்குப் புகலிடமாவீர். (71)

गुरुपुङ्गव पुङ्गवकेतन ते समतामयतान्न हि कोऽपि सुधीः ।
शरणागतवत्सल तत्त्वनिधे भव शङ्करदेशिक मे शरणम् ॥ ७२

குருவானவர்களில் சிறந்தவரே! காளையைக் கொடியாகக் கொண்டவரே! எந்தப் பேரறிஞரும் உமக்கு இணையானவரல்ல. சரணடைந்தவரிடம் பரிவு மிக்கவரே! உட்பொருளின் குவியலே! நல்வழி காட்டுகிற சங்கரரே! எனக்குப் புகலிடமாவீர்! (72)

विदिता न मया विशदैककला न च किञ्चन काञ्चनमस्ति गुरो ।
द्रुतमेव विधेहि कृपां सहजां भव शङ्करदेशिक मे शरणम् ॥ ७३

குருவே! ஒருகலை கூடத் தெளிவாக என்னுல் அறியப்படவில்லை. என்னிடம் பொருளுமில்லை. உம் இயல்பான பரிவை விரைவுடன் காட்டுவீர்! நல்வழி காட்டுகிற சங்கரரே! எனக்குப் புகலிடமாவீர்! (தோடகரின் தோடகாஷ்டகம்) (73)

येषां धीसूर्यदीप्त्या प्रतिहतमगमन्नाशमेकान्ततो मे
ध्वान्तं स्वान्तस्य हेतुर्जननमरणसन्तानदोलाधिरूढेः ।
येषां पादौ प्रपन्नाः श्रुतिशमविनयैर्भूषिताः शिष्यसङ्घाः
सद्यो मुक्ताः स्थितास्तान्यतिवरमहितान्यावदायुर्नमामि ॥ ७४

பிறப்பிறப்புத் தொடர் என்ற ஊஞ்சலில் ஏறக்காரணமான என் உள்ளத்திலிருந்த கும்மிருட்டு எவரது பேரறிவாகிய ஸூரியனின் பேரொளியால் முழுவதும் அழிந்ததோ எவரது இருசரணங்களைப் பற்றி உபதேசம் கேட்பது, மனவடக்கம், பணிவு இவற்றால் சிறப்புற்ற சிஷ்யர்களின் கூட்டங்கள் உடன் முக்தி பெற்றனரோ, துறவியரால் நன்கு மதிக்கப் பெற்ற ஆசாரியர்களை உயிருள்ள வரை வணங்குகிறேன் (தோடகரின் ச்ருதி ஸார ஸமுத்தரணம்.) (74)

वेदान्तोदरवर्ति भास्वदमलं ध्वान्तच्छिदस्मद्धियो
दिव्यं ज्ञानमतीन्द्रियेऽपि विषये व्याहन्यते न क्वचित् ।
यो नो न्यायशलाकयैव निखिलं संसारबीजं तमः
प्रोत्सार्याविरकार्षीत् गुरुगुरुः पूज्याय तस्मै नमः ॥ ७५

குருவரர்களுக்கும் குருவான இவர் பிறப்பிறப்புத் தொடரின் விதையான அறியாமை எனும் இருளை ஆத்ம விசாரமெனும் சலாகையால் கெல்லி எறிந்தார். உபநிஷத்துகளின் நடுவே உள்ள - ஒளிமிக்க - மாசற்ற நம் அறிவை மறைத்த அறியாமையிருளை அகற்றவல்ல - புலன்களுக்கு உட்படாத பொருளையும் எங்கும் தடையுறுதவாறு புலப்படுத்துகிற திவ்ய ஜ்ஞானத்தை வெளிப்படுத்தினார். வழிபடத்தக்க அவருக்கு நமஸ்காரம் (ஸுரேச்வரர்.) (75)

आशैलादुदयात्तथास्तगिरितो भास्वद्यशोराशिभिः
व्याप्तं विश्वमनन्धकारमभवद्यस्य स्म शिष्यैरिदम् ।
आराद् ज्ञानगभस्तिभिः प्रतिहतश्चन्द्रायते भास्करः
तस्मै शङ्करभानवे तनुमनोवाग्भिर्नमः स्यात्सदा ॥ ७६

உதய கிரியிலிருந்து அஸ்தமன கிரிவரை ஒளி பரப்புகிற புகழ் குவியலுள்ள இவரது சிஷ்யர்களால் சூழப்பெற்ற உலகம் இருள் நீங்கியதாயிற்று. ஜ்ஞான ஸூரியனான இவரது ஜ்ஞான ஒளிக்கதிர்களால் மங்கிய ஸூரியன் சந்திரனானான். அந்த சங்கரர் என்ற ஸூரியனுக்கு உடல், உள்ளம், வாக்கு என்ற மூன்றாலும் எப்போதும் நமஸ்காரம். (ஸுரேச்வரர்.) (76)

नमाम्यभोगिपरिवारसम्पदं निरस्तभूतिमनुमार्धविग्रहम् ।
अनुग्रमुन्मृदितकाललाञ्छनं विनाविनायकमपूर्वशङ्करम् ॥ ७७

இவர் ஒரு அபூர்வ சங்கரர். (முன் உள்ள கைலாஸ சங்கரரிடமிருந்து மாறுபட்டவர்.) இவரிடம் போகிகளாகிய (பாம்புகளாகிய) பரிவார நிறைவு இல்லை. (ஆனால் சிறிதும் போக (சிற்றின்ப உணர்வு) மற்ற பரிவாரங்களின் (சிஷ்யர்களின்) நிறைவு பெற்றவர். விபூதியை (செல்வத்தை)த் துறந்தவர். உமையைப் பாதி உடலாகக் கொண்டவரல்ல. அனுமையை (அனுமானம் என்ற பிரமாணத்தை)ப் பாதி உடலாகக் கொண்டவர். உக்ரராக இல்லாத படியே சாந்தராகவே காலனின் அடையாளத்தை அழித்தவர். (சிவன் உக்ரராகிக் காலனை அழித்தவர்) விநாயகர் (தன்னை முன் நின்று அழைத்துச் செல்பவர்) என எவரையும் கொள்ளாதவர். விநாயகரின்றி இருப்பவர். இவரை வணங்குகிறேன். (பத்ம பாதாசாரியர்) (77)

शिवगुरुतपःप्रबन्धं चिद्घनमार्योदरावासम् ।
शङ्करगुरुवरमाद्यं ध्यायाम्यनिशं परात्मानम् ॥ ७८

சிவ குருவின் தவத்தின் முழுவடிவமும் சித் சக்தி கனத்தவரும் ஆர்யையின் வயிற்றில் குடியிருந்தவரும் பரமாத்மாவுமான ஆதிசங்கர குருவை எப்போதும் தியானிக்கிறேன். (பிரும்ம ஸூத்ரானு குண்யஸித்தி) (78)

मूर्धनि हिमकरचिह्नं निटिले नयनाङ्कमंसयोः शूलम् ।
वपुषि स्फटिकसवर्णं बालं तं शङ्करं वन्दे ॥ ७९

பாலசங்கரர், தலையில் சந்திரனின் அடையாளம் கொண்டவர், நெற்றியில் கண்வடிவில் கோடு உள்ளவர். தோளில் சூலரேகை கொண்டவர். ஸ்படிக வண்ண மேனியர். அவரை வணங்குகிறேன். (79)

व्याख्या मौनमयी ततः परिगलच्छङ्काकलङ्काङ्कुराः
छात्रा विश्वपवित्रचित्रचरितास्ते वामदेवादयः ।
यस्यायं स गुरुर्विनीतमनुजत्राणाय पृथ्वीतलं
प्राप्तः शङ्कररूपभृन्नतमिमं पुष्णातु तृष्णातुरम् ॥ ८०

மௌனமே பெருவிளக்கவுரை. அதனைக் கேட்ட வாமதேவர் முதலிய உலகையே தூயதாக்குகிற நடைமுறை கொண்ட சிஷ்யர்கள் ஐயம் எனும் மாசின் முளை நழுவுவதை உணர்ந்தனர். இவரோ அவர்களின் குரு. பணிவுடனுள்ள சீடரென்ற மக்களைக் காக்க சங்கர வடிவேற்றார். அவர் தத்வ விளக்கம் பெறுவதற்கான வேட்கையுடனுள்ள வணங்கி நிற்கும் இவனைப் போஷிக்கட்டும். (பகவத் பாதஸப்ததி) (80)

भूषणाय निगमान्तगवीनां भीषणाय कथकप्रकराणाम् ।
शङ्कराय भवसिन्धुनिमज्जत्किङ्करावनकृते प्रणतोऽस्मि ॥ ८१

உபநிஷத நூல்களை அழகுபடுத்துபவர். வீண்பேச்சாளரை அச்சுறுத்துபவர், பிறவிக்கடலில் மூழ்கியவரைக் காப்பாற்றுபவர். அந்த சங்கரரை வணங்குகிறேன் (யதிஸார்வபௌமோபஹாரம்) (81)

यो बन्धुः सहभूः सखा च सविता माता धनं दैवतं
त्रातापीति च सर्वमीश्वरमतिक्रुद्धं च यः सौम्ययेत् ।
यत्सेवाविधुरा स्थितिः स्रवति हि ब्रह्मादराधीतम-
प्याचार्यं तमहं पुनर्भवगदोल्लाघाय लघ्वाश्रये ॥ ८२

ஆசாரியரே என் உறவினர், உடன் பிறந்தவர், நண்பர், தந்தை, தாய், செல்வம், தைவம், காப்பவர், மிகவும் கோபத்திலுள்ள

ஈசனையும் ஸமாதானப்படுத்திக் குளிர்விப்பவர். இவரது பணிவிடையில் ஈடுபடாத நிலை மிகவும் அக்கரையுடன் ஓதிய வேதத்தையும் மறக்கச் செய்யும். பிறவிநோய் நீங்க அந்த ஆசாரியரை அண்டி நிற்கிறேன். (ஸுஷமா). (82)

मीमांसया कपटतो भुजगाम्वयेव स्वाधीनतामुपनिषद्विनतेव नीता ।
येनोद्धृताऽमृतफलेन गरुत्मतेव तस्मै नमो भगवतेऽद्भुतशङ्कराय ॥ ८३

ஸர்ப்பங்களின் தாயான கத்ரூ போன்ற மீமாம்ஸா சாஸ்திரத்தால் வஞ்சனையால் உபநிஷத் என்ற விநதை வசப்படுத்தப்பட்டாள், கருடனைப் போன்ற ஆசாரியர் ஜ்ஞானாமுதம் கொணர்ந்து உபநிஷத்தாகிற விநதையை மீட்டார். அந்த அற்புத சங்கரருக்கு நமஸ்காரம் (மதுஸூதன ஸரஸ்வதி.) (83)

न स्तौमि तं व्यासमशेषमर्थं सम्यङ् न सूत्रैरपि यो बबन्ध ।
विनापि तैः संग्रथिताखिलार्थं तं शङ्करं नौमि सुरेश्वरञ्च ॥ ८४

வியாஸரை நான் துதிக்க மாட்டேன். அவர் தன் நூல் கயிறு போன்ற ஸூத்ரங்களால் (உபநிஷத்) பொருளனைத்தையும் நன்கு கட்டவில்லை. அந்த ஸூத்ரங்களின்றியே பொருளனைத்தையும் நன்கு பிணைத்துக் கட்டிய சங்கரரையும் ஸுரேச்வரரையும் துதிக்கிறேன் (ஸித்தாந்தபிந்து) (84)

कामं यस्तु समूलघातमवधीत् स्वर्गापवर्गापहं
रोषं यः खलु चूर्णपेषमपिषन्निश्शेषदोषावहम् ।
लोभादीनपि यः परान् कुलसमुच्छेदं समुच्चिच्छिदे
स्वस्यान्तेवसतां सतां स भगवत्पादः कथं वर्ण्यते ॥ ८५

தன்னை அணுகியவருக்கு ஸ்வர்க்கத்தையும் முக்தியையும் தடுக்கிற காமத்தை வேருடன் அழித்தவர். குறைகளனைத்தையும் கொண்டு சேர்க்கிற ரோஷத்தைத் தூளாக்கியவர், லோபம், மோகம் முதலியவற்றையும் பூண்டற்றுப் போகச் செய்தவர். அந்த பகவத்பாதரை எவ்வாறு வர்ணிக்க இயலும். (பகவத்பாத ஸப்ததி) (85)

अद्वैतार्णवपूर्णचन्द्रमभिदापद्माटवीभास्करं
विद्वत्कोटिसमर्चिताङ्घ्रियुगलं प्रद्वेषिकक्षानलम्।
हृद्याभेद्यसमस्तवेदजनितप्रोद्यद्विवेकाङ्कुरं
स्विद्यद्वागमृतं परात्परगुरुं श्रीशङ्करं तं भजे॥ ८६

அத்வைதப் பாற்கடலில் தோன்றிய சந்திரன், பேதமின்மை (அத்வைதம்) என்ற தாமரைக் காட்டை மலரச் செய்கிற ஸூரியன். பேரறிஞரின் கூட்டத்தால் இரு திருவடிகளிலும் வழிபடப் பெற்றவர். எதிர்ப்பவரைப் பொசுக்குகிற காட்டுத் தீ, மனத்திற்கு உவந்த - வேறுபடுத்த இயலாத- வேதத்திலிருந்து விளைந்த பகுத்தறிவின் முளையானவர், வாக்கெனும் அமுதத்தைக் கொப்பளிப்பவர். மேலானவருக்கும் மேலான குரு. அந்த சங்கரரை வழிபடுகிறேன். (86)

वेदे ब्रह्मसमः तदङ्गनिचये गर्गोपमस्तत्कथा-
तात्पर्यार्थविवेचने गुरुसमस्तत्कर्मसंसर्गणे (वर्णने)।
आसीज्जैमिनिरेव तद्वचनजप्रोद्बोधकन्दे समो
व्यासेनैव विभाति सद्गुरुरसौ श्रीशङ्कराख्यः क्षितौ॥ ८७

வேதத்தில் பிரும்மாவுடன், வேதாங்கங்களில் கர்க்கருடன், அவற்றை விளக்குவதில் பிருஹஸ்பதியுடன், வேதம் கூறுகிற கருமங்களைத் தொகுப்பதில் ஜைமினியுடன், வேதவாக்யங்கள் கூறுகிற தத்வ விளக்கத்தில் வியாஸருடன் ஸமமான ஸத்குரு சங்கரர் பூமியில் விளங்குகிறார். (மாதவீய சங்கரவிஜயம்). (87)

लोकानुग्रहतत्परः परशिवः संप्रार्थितो ब्रह्मणा
चार्वाकादिमतप्रभेदनिपुणां बुद्धिं सदा धारयन्।
कालट्याख्यपुरोत्तमे शिवगुरुर्विद्याधिनाथश्च यः
तत्पत्न्यां शिवतारके समुदितः श्रीशङ्कराख्यां वहन्॥ ८८

பிரும்மாவின் வேண்டுகோளை ஏற்ற பரமசிவன் சார்வாகர் முதலானவரின் கொள்கையைச் சிதைக்கவல்ல அறிவை எப்போதும்

வெளிப்படுத்தி காலடியில் வித்யாதிநாத - சிவகுருவிற்கு அவர் மனைவியிடம் திருவாதிரையில் ஸ்ரீ சங்கரர் என்ற பெயருடன் தோன்றினர். (மார்க்கண்டேய ஸம்ஹிதை.) (88)

शाक्यैः पाशुपतैरपि क्षपणकैः कापालिकैर्वैष्णवैः
अन्यैरप्यखिलं खिलं खलु खलैर्दुर्वादिभिर्वैदिकम् ।
पन्थानं परिरक्षितुं क्षितितलं प्राप्तः परिक्रीडते
घोरे संसृतिकानने विचरतां क्षेमंकरः शङ्करः ॥ ८९

சாக்யர், பாசுபதர், சமணர், காபாலிகர், வைஷ்ணவர் மற்றுமுள்ள துர்மதவாதிகளால் சிதைவுற்ற வேதநெறியைக் காக்கப் புவியில் தோன்றிய சங்கரர் பயமுறுத்துகிற பிறவிக் காட்டில் அலைபவரின் நலம் புரிபவராக லீலை புரிகிறார். (பகவத் பாதஸப்ததி) (89)

महिमाननीयचरितं दधतं महिमानमीड्यमहिमाल्यभृतः ।
अवतारभूतमवतान्नुवतां भवतारणं किमपि वस्तु मुहुः ॥ ९०

புவியில் பெரிதும் மதிக்கப் பெற்ற நடைமுறை கொண்டவர், பாம்பை அணியாகக் கொண்ட சிவனது மஹிமையைத் தாங்குகிற அவதாரமானவர், துதிப்பவரின் பிறவிக் கடலைக் கடக்கச் செய்பவர், அந்தப் பெரும் பொருள் நம்மைக் காக்கட்டும். (90)

शङ्कराचार्यवर्यो मे सन्निधत्तां सदा हृदि ।
सौम्यं यस्य वपुः ख्यातं विजहद्विषमां दृशम् ॥ ९१

ஸமநிலையற்ற பார்வையை விலக்கியவரும் மென்மையும் அழகும் கொண்ட மேனியுள்ளவருமான சங்கராசாரியப் பெருந்தகை என் உள்ளத்தில் காட்சி காட்டும். (91)

जीवपर भेदपर वादपर तन्त्रोद्वेलमदतालतरुजालकरवालाः ।
किङ्कर हृदङ्कुरित पङ्क हरणा निश्शङ्कमकलङ्क गुरुशङ्करसुचर्याः ॥ ९२

மாசற்ற குரு சங்கரரின் நடைமுறைகள் ஜீவாத்மா வேறு, பரமாத்மா வேறு என்ற மற்றவரின் கொள்கை என்ற - அளவுக்கு

மிஞ்சிய பனைமரத்தை வெட்டிச் சாய்க்கிற வீச்சறிவாட்கள். தனக்குப் பணிவிடை செய்பவரின் உள்ளத்தில் முளைவிட்டுள்ள சேற்றை அகற்றுபவை. (யதிஸார்வபௌமோபஹாரம்.) (92)

उद्धृत्य वेदपयसः कमलामिवाब्धेः आलिङ्गिताखिलजगत्प्रभवैकमूर्तिम् ।
विद्यामशेषजगतां सुखदामदाद्यः तं शङ्करं विमलभाष्यकृतं नमामि ॥ ९३

பாற்கடலிலிருந்து லக்ஷ்மியைப் போல் வேதமெனும் கடலிலிருந்து உலகிற்கு இன்பம் தருகிற பிரும்மவித்யையைக் கொணர்ந்தார். அந்த வித்யை உலகமனைத்தின் தோற்றுவாயான ஒரே மூர்த்தியான பரம்பொருளை (சிவனை) அணைத்தவள். மாசற்ற பாஷ்யத்தை இயற்றிய சங்கரரை வணங்குகிறேன். (விவரணாசார்யர்.) (93)

वेदान्ताम्भोगभीरा नयमकरकुला ब्रह्मविद्याब्जषण्डा
पाषण्डोत्तुङ्गवृक्षप्रमथननिपुणा मानवीचीतरङ्गा ।
यस्यास्योत्था सरस्वत्यखिलभवभयध्वंसिनी शङ्करस्य
गङ्गा शम्भोः कपर्दादिव निखिलगुरोर्नौमि तत्पादपद्मम् ॥ ९४

சிவபெருமானின் சடையிலிருந்து கங்கை பெருகியது போல் சங்கரரின் வாயிலிருந்து வாக்கு பெருகியது. பிறவிப் பயத்தைப் போக்கவல்லது. வேதாந்தம் (உபநிஷத்) எனும் நீரால் ஆழம் மிக்கது. நியாயங்கள் என்ற முதலைகள் உள்ளது. பிரும்மவித்யை என்ற தாமரைக் காடு நிரம்பியது. நாஸ்திகரெனும் பெரும்மரத்தை வெட்டிச் சாய்த்தது. பிரமாணங்கள் என்ற அலைமோதுமிடம். அந்த சங்கரரின் திருவடித் தாமரைகளைத் துதிக்கிறேன். (ஜ்ஞானகந பாதர்.) (94)

त्रय्यन्तवध्वा गुरुवाग्वयस्याविवेकचूडामणिभूषितायाः
पाणिग्रहस्तत्पुरुषापरोक्षानुभूतिरुद्वाहसदः सतां हृत् ॥ ९५

உபநிஷத்தென்ற மணப்பெண், குருவின் வாக்கு அவளது தோழி. ஆத்ம - அநாத்ம விவேகம் என்ற சூடாமணி சூடியவள். திருமண மண்டபம் நல்லோரின் உள்ளம். புலன்களுக்குப் புலப்படாத அபரோக்ஷ அனுபூதியான ஆத்மாவின் உணர்வே அவளுக்கு பாணிகிரஹணம் (கைத்தலம் பற்றுதல்.) (95)

श्रुतिस्मृतिपुराणानामालयं करुणालयम् ।
नमामि भगवत्पादशङ्करं लोकशङ्करम् ॥ ९६

வேதம், ஸ்மிருதி, புராணம் இவற்றின் வழிபாட்டிடம். கருணை தங்குமிடம். உலகத்திற்கு நலம் புரிபவர். இந்த பகவத் பாதசங்கரரை வழிபடுகிறேன். (சாந்திபாடம்.) (96)

भगवत्पादपादाब्जपांसवः पान्तु सन्ततम् ।
अपारासारसंसारसागरोत्तारसेतवः ॥ ९७

கரையற்றதும் வலிவற்றதுமான ஸம்ஸாரக் கடலைக் கடக்கச் செய்கிற பாலமான பகவத்பாதரின் திருவடித்தாமரைகளின் தூசிகள் எப்போதும் காக்கட்டும். (சித்ஸுகாசாரியர்.) (97)

यद्ययं शङ्करः साक्षाद्वेदान्ताम्भोजभास्करः ।
नोदेष्यत्तर्हि काशेत कथं व्यासादिसूत्रितम् ॥ ९८

வேதாந்தமாகிய தாமரையை மலரச் செய்கிற ஸூரியனான சங்கரர் உதிக்கவில்லையெனில் வியாஸர் முதலானோர் தொகுத்த ஸூத்ரங்கள் எப்படி பிரகாசமடைந்திருக்கும் ? (98)

नमस्तस्मै भगवते शङ्कराचार्यरूपिणे ।
येन वेदान्तविद्येयमुद्धृता वेदसागरात् ॥ ९९

அந்த சங்கராசார்யரின் வடிவிலுள்ள பகவானுக்கு நமஸ்காரம். இவர் தான் வேதமெனும் கடலிலிருந்து வேதாந்த வித்யையை வெளிக் கொணர்ந்தார். (99)

भगवत्पादसम्भूतामात्माम्भोनिधिगामिनीम् ।
भाष्यभागीरथीं भूयो भजामो भवशान्तये ॥ १००

பகவத்பாதரிடம் தோன்றிய பாஷ்யம் எனும் கங்கை ஆத்மா என்ற கடலை நோக்கிச் செல்கிறது. பிறப்பிறப்புத் துயரடங்க அதனை அடிக்கடி நாடுவோம். (பாஷ்ய ஸ்வாமீ) (100)

श्रीमते शङ्करार्याय श्रीमतेऽद्भुतशक्तये ।
नमोऽस्त्वद्वैतसिद्धान्तस्थापनोपात्तमूर्तये ॥ १०१

பேரறிவுள்ளவர், வியப்புக்குரிய பேராற்றலுள்ளவர். அத்வைத ஸித்தாந்தத்தை நிலைபெறச் செய்ய அவதரித்தவர், அந்த சீர்மிக்க சங்கரார்யருக்கு நமஸ்காரம். (யதிஸார்வ பௌமோபஹாரம்) (101)

शङ्कारूपेण मच्चित्तं पङ्कीकृतमभूद्यया ।
सा माया किङ्करी यस्य शङ्कराचार्यमाश्रये ॥ १०२

மாயை என் சித்தத்தை சந்தேகமாகிய சேறு படியச் செய்தாள். அந்த மாயையைத் தன் பணியாளராக்கிய சங்கராசாரியரை அண்டுகிறேன். (ஸுரேச்வராசார்யர்.) (102)

शङ्कराश्लेष विलसदानन्दामृतनिर्भराम् ।
विश्वोत्तंसितपादाब्जां ब्रह्मविद्यां विभावये ॥ १०३

பிரும்மவித்யை சங்கரரது அணைப்பால் துலங்குகிற ஆனந்தத்தின் அமுதம் நிறைந்தவளாகி உலகின் தலையணியாகத் தன் திருவடியைக் கொண்டாள். அவளைத் தியானிக்கிறேன். (பிரும்ம வித்யாபரணம்.) (103)

मिथुनीकृतसत्यानृतविद्याविद्याद्वयीविषयौ ।
ब्रह्मजगती पयोऽम्बुवदिह विभजन्तं भजे परमहंसम् ॥ १०४

மெய்யும், பொய்யும் இணைந்து வித்யையும் அவித்யையுமாயின. அதனால் பாலும் நீரும் போல் பிரும்மமும் உலகமும் கலந்தன. இதனைப் பிரித்த பரமஹம்ஸரான ஆசாரியரை வழிபடுகிறேன். (104)

श्रीगुरुं भगवत्पादं शरण्यं भक्तवत्सलम् ।
शिवं शिवकरं शुद्धमप्रमेयं नमाम्यहम् ॥ १०५

ஆசாரிய பகவத்பாதர். புகலடைந்தவரைக் காப்பவர். பக்தரிடம் தாயன்பு கொண்டவர். மங்களம் புரிகிற சிவன், தூயவர், மதிப்பிட முடியாதவர், அவரை வணங்குகிறேன். (105)

आश्रिताज्ञानतत्कार्यनाशकं देशिकोत्तमम् ।
चिन्मुद्रालङ्कृतकरं यतिराजं नमाम्यहम् ॥ १०६

அண்டி நிற்பவரின் அறியாமையையும் அதன் விளைவுகளையும் அழிப்பவர். வழிகாட்டிகளில் மிகச்சிறந்தவர். சின்முத்ரையால் அழகுற்ற கையுள்ளவர், துறவிகளின் அரசன். அவரை வணங்குகிறேன். (குர்வஷ்டகம்.) (106)

शास्त्रं शारीरमीमांसा देवस्तु परमेश्वरः ।
आचार्याः शङ्कराचार्याः सन्तु जन्मनि जन्मनि ॥ १०७

ஒவ்வொரு பிறவியிலும் நான் படிக்கிற சாஸ்திரம் அத்வைத வேதாந்தம், வழிபடுகிற தேவன் பரமேச்வரன், ஆசாரியர் சங்கராசாரியர் என்றமையட்டும். (விவேகசூடாமணி) (107)

यमाश्रिता गिरां देवी नन्दयत्यात्मसंश्रितान् ।
तमाश्रये श्रिया जुष्टं शङ्करं करुणानिधिम् ॥ १०८

வாக்குகளின் தேவியான ஸரஸ்வதி இந்த சங்கரரை அண்டியவளாக தன்னை அணுகுபவர்களை மகிழ்விக்கிருள். அந்த கருணாநிதியான சீர்மிக்க சங்கரரை அண்டிநிற்கிறேன். (போதேந்த்ர ஸரஸ்வதி) (108)

वक्तारमासाद्य यमेव नित्या सरस्वती स्वार्थसमन्विताऽऽसीत् ।
निरस्तदुस्तर्ककलङ्कपङ्का नमामि तं शङ्करमर्चिताङ्घ्रिम् ॥ १०९

நித்ய ஸரஸ்வதியான வேதம் இவரை விளக்குபவராகப் பெற்ற பின்னரே தன் பொருள் துலங்கப் பெற்றது. வீண்வாதத்தால் ஏற்படுகிற மாசையும், சேற்றையும் அகற்றிக் கொண்டது அனைவராலும் திருவடிகளில் வழிபடப் பெற்ற அந்த சங்கரரை வணங்குகிறேன். (ஸர்வஜ்ஞாத்மா) (109)

भगवत्पादपादाब्जद्वन्द्वं द्वन्द्वनिबर्हणम् ।
सुरेश्वरादिसद्भृङ्गैः अवलम्बितमाभजे ॥ ११०

சோகம் - மோகம், இன்ப ம் - துன்பம் என்ற இரட்டைகளை அடக்கியது, ஸுரேச்வரர் முதலிய நல்ல தேனீக்களால் பற்றப்பட்டது. அந்த பகவத்பாதரின் இருதிருவடித் தாமரைகளை வழிபடுகிறேன். (குர்வஷ்டகம்) (110)

हरलीलावताराय शङ्कराय वरौजसे ।
कैवल्यकलनाकल्पतरवे गुरवे नमः ॥ १११

ஹரனின் லீலாவதாரமும் பேரொளி கொண்டவரும் முக்தியை அளிக்கிற கற்பக மரமுமான குருவிற்கு நமஸ்காரம். (தத்வசந்திரிகா) (111)

दक्षेण पाणिकमलेन विबोधमुद्रां अन्येन नम्रवरदानसमर्थचिह्नम् ।
बिभ्राण पद्मनिभनेत्र कृपाम्बुराशे श्रीशङ्करार्य मम देहि पदावलम्बम् ॥ ११२

தாமரை போன்ற வலது கையால் ஜ்ஞானமுத்ரையையும் மற்ற கையால் விரும்பியதை அளிப்பதில் வல்லமையைக் காட்டுகிற வரதமுத்ரையையும் காட்டுபவரே ! தாமரைக் கண்ணரே ! கருணைக்கடலே ! ஸ்ரீ சங்கராசார்யரே ! எனக்கு உம் திருவடியைப் பற்றுக் கோலாகத் தருவீர். (ஸ்ரீ சங்கராசார்ய பதாவலம் பனஸ்தோத்திரம்.) (112)

यद्भाष्योक्तेर्लवपरिजुषश्छात्रवर्गा महान्तो
निर्भिन्दन्ति प्रबलमतयो वादिशैलं समस्तम् ।
यैर्वेदाब्धेरमृतमिव सद्भाष्यमात्मप्रकाशं
तत्पादाब्जं स्फुरतु हृदये ह्युद्धृतं सर्वदा मे ॥ ११३

ஸ்ரீ சங்கரரது பாஷ்ய வசனங்களில் மிகச்சிறிதளவு பரிசயம் பெற்ற சிஷ்யர்கள் அறிவு வலிவு பெற்று வாதியாகிற மலையனைத்தையும் தூளாக்குகின்றனர். வேதமாகிற கடலிலிருந்து

ஆத்மாவை விளக்குகிற நல்ல பாஷ்யத்தை அமுதமாகப் பெறுகின்றனர். அந்த ஆசாரியரின் தூக்கிய திருவடி என் உள்ளத்தில் ஒளிரட்டும். (மனீஷா பஞ்சக விவரணம்.) (113)

संसारसर्पपरिदष्टविनष्टजन्तु-

सञ्जीवनाय परया कृपयोपपन्नः ।

ब्रह्मावबोधपरमौषधमुद्वहन् य-

स्तं शङ्करं परतरं भिषजां भजामि ॥ ११४

சங்கரர் என்ற விஷவைத்யர். பிறப்பிறப்புத் தொடராகிய பாம்பால் தீண்டப் பெற்று உயிரிழந்தவரைப் பிழைப்பிக்க பிரும்ம ஜ்ஞானம் என்ற பெரும் ஔஷதத்தைக் கொண்டு தருகிறார். அந்த மிக மேலான மருத்துவரை வழிபடுகிறேன். (அத்வைத போதாமிருதம்.) (114)

अखिलपरमहंसदेशिकमागमगूढार्थदर्शकं प्राज्ञम् ।

स्वानन्दपूर्णसागरमनिशमहं नौमि शङ्कराचार्यम् ॥ ११५

பரமஹம்ஸரனைவருக்கும் வழிகாட்டி; வேதத்தின் மறைபொருளைக் காட்டுபவர், பேரறிவாளர், ஆத்மானந்தம் நிறைந்தகடல், அந்த சங்கராசாரியரை எப்போதும் துதிக்கிறேன். (நாகநாதரின் ஆத்மபோதம்) (115)

दृष्ट्वा यो दिव्यदृष्टिः कलियुगसमये मन्दभाग्या मनुष्या-

स्तस्मात्तन्त्रप्रपञ्चः सुरयजनविधिर्मत्कृतो निष्फलः स्यात् ।

इत्याविर्भूय पृथ्व्यां पुनरपि कृतवांस्तन्त्रसारं गिरीश-

स्तं वन्दे शङ्कराख्यं महिततममनःप्रार्थनीयार्थरूपम् ॥ ११६

கலியுகத்தில் மக்கள் பாக்கியம் குறைந்தவர்கள். அதனால் தந்திரங்களில் தேவவழிபாட்டு முறைகளை விளக்கியது வீணே என திவ்ய திருஷ்டியால் கண்ட சிவன் சங்கரராகத் தோன்றி பிரபஞ்சஸாரம் என்ற தந்திரங்களின் ஸாரத்தை விளக்குகிற நூலை இயற்றினார். பெருமதிப்பிற்குரியவரின் மனத்தால் வேண்டத்தக்க

அந்த சங்கரரை நான் வணங்குகிறேன். (பிரபஞ்சஸாரதீபிகை உரை) (116)

यदीयवाक्सूर्यरुचिप्रणाशितो हृदन्धकारो नमतामशेषतः ।
महात्मनश्शिष्यहिते सदा रतान् नमामि तान् शङ्करपूज्यदेशिकान् ॥ ११७

இவரது வாக்காகிற ஸூர்ய ஒளியால் வணங்குபவரின் உள்ளத்திருள் மீதமின்றி அழிகிறது. சிஷ்யர்களின் நலனில் எப்பொதும் முனைந்த சங்கரர் என்ற வழிபடத்தக்க குருவை - மஹாத்மாவை வணங்குகிறேன். (சங்குகவியின் கைவல்ய நவனீதம்) (117)

वेदान्तार्थं गभीरं ह्यतिसुगमतया बोधयामीति विष्णु-
व्यासात्माऽसूत्रयत्तद्दुरधिगममभूद्वादिदुर्बुद्धिभेदात् ।
भिन्दन् दुर्बुद्धिभेदं य इह करुणयाऽभाष्ययद्भाष्यमेतत्
तं वन्दे सर्ववन्द्यं त्रिजगति भगवत्पादसंज्ञं महेशम् ॥ ११८

ஆழ்ந்த வேதாந்தக் கருத்தை எளிதாக உணரும்படி விளக்குகிறேன் என விஷ்ணு வியாஸராகி ஸூத்ரங்களை இயற்றினார். வாதிகளின் கெட்டபுத்தியால் அது எளிதில் புரிந்துகொள்ள இயலாததாயிற்று. பகவத்பாதர் கருணையால் துர்புத்தியால் வந்த பேதஉணர்ச்சியை நீக்கி பாஷ்யத்தை எழுதினார். அந்த பகவத்பாதர் என்ற பெயர் கொண்ட மஹேசுவரன் மூவுலகிலும் அனைவரால் வணங்கத்தக்கவர். அவரை நான் வணங்குகிறேன் (ராமாநந்தரின் விவரண விளக்கம்.) (118)

नमः श्रीशङ्कराचार्यगुरवे शङ्करात्मने ।
शरीरिणां शङ्कराय शङ्करज्ञानहेतवे ॥ ११९

ஸ்ரீ சங்கராசாரியர் என்ற குரு சிவனது ஸ்வரூபம், மக்களின் நலத்தைச் செய்பவர். நலமிக்க பேரறிவு பெற அவருக்கு வந்தனம். (ஸம்க்ஷேபசாரீரகடீகை) (119)

येनाद्वन्द्वमखण्डमक्षयपदं प्रादर्शि तापापहं
भाष्यग्रन्थनिबन्धनैः श्रुतिशिरोवाक्यार्थविद्योतिभिः ।

नित्यो यत्र समस्त सद्गुणगणस्तं शङ्कराचार्यगी-

विख्यातं मुनिमौलिलालितपदद्वन्द्वं सदा संश्रये ॥ १२०

உபநிஷத்துகள் வாக்யங்களின் பொருளை விளக்க வந்த பாஷ்ய நூல்களால் இரண்டற்றதும் துண்டாட முடியாததும் தேய்வற்றதும் தாபத்தைப் போக்குவதுமான பரதத்துவம் விளக்கப்பட்டது. அந்த சங்கரரின் இருதிருவடிகளும் அனைத்து நற்குணங்களும் பொருந்தியது. முனிவர்களால் தலைகளால் வழிபடப் பெற்றது. சங்கராசாரியர் என்ற சொல்லால் பரப்பப்பட்டது. அதனை எப்போதும் அண்டி நிற்கிறேன். (ஸம்க்ஷேபசாரீரகம் உரை) (120)

सूत्रप्रग्रहवेदवाजिनि महन्मीमांसकस्यन्दने

तिष्ठन् भाष्यपिनाकमुज्ज्वलगुणं कृत्वाऽऽत्मधीसायकम् ।

आकृष्य प्रदहन्नशेषविपदां मूलं पुराणां त्रयं

भूयान्नोऽभिनवः पुरारिरशुभस्योच्छित्तये शङ्करः ॥ १२१

இந்த சங்கரர் ஒரு புதிய திரிபுராரியான சிவன். ஸூத்ரங்கள் என்ற கடிவாளத்தால் கட்டுப்பட்ட வேதம் எனும் குதிரை கொண்ட மீமாம்ஸகன் என்ற தேரில் அமர்ந்து பாஷ்யமெனும் பிநாகமேந்தி பளபளப்பான நாணேற்றி, தன் புத்தியை அம்பாக்கி நாணை இழுத்து அம்பால் எல்லா கேடுகளுக்கும் மூலகாரணமான உடல் புலன் உள்ளம் என்ற முப்புரத்தையும் எரித்துள்ளார். அந்த சங்கரர் அசுபம் நீங்க அருள் புரியட்டும். (ருஜுவிவரணம்) (121)

यद्भाष्यसागरजयुक्तिमणीन् प्रकीर्णान्

प्राप्याधुना कतिपयान् कवयो भवन्ति ।

तस्मै नमो जनमनोब्जदिवाकराय

कृत्स्नागमार्थनिलयाय यतीश्वराय ॥ १२२

இவரது பாஷ்யம் எனும் கடலில் ஆங்காங்கு வெளிப்படுகிற யுக்திகள் எனும் ரத்னங்களில் சிலவற்றைப் பெற்றவர் இன்று கவியாகின்றனர். மக்களின் மனமாகிய தாமரையை மலரச் செய்கிற ஸூரியன். வேதங்களனைத்தின் பொருள் துலங்குமிடம். அந்த துறவியசரருக்கு வந்தனம். (உபதேசபிரகரண விவரணம்) (122)

याऽनुभूतिः स्वयं ज्योतिरादित्येशानविग्रहा ।
शङ्कराख्या च तं नौमि सुरेश्वरपदास्पदम् ॥ १२३

சங்கரர் என்ற பேரனுபூதி, பேரொளி, ஸூரியன் மற்றும் சிவனின் வடிவம். ஸுரேச்வரரின் பெருநிலைக்குக் காரணம். அவரைத் துதிக்கிறேன். (பிருஹதாரண்யக பாஷ்ய வார்த்திகம்.) (123)

नमस्तस्मै भगवते शङ्कराचार्यरूपिणे ।
येन वेदान्तविद्येयमुद्धृता वेदसागरात् ॥ १२४

வேதமெனும் கடலிலிருந்து இந்த வேதாந்த வித்யையைக் கண்டெடுத்த சங்கராசார்யர் வடிவிலுள்ள ஈசனுக்கு வந்தனம். (124)

मिथ्याज्ञानविजृम्भमाणजगतामभ्यन्तरे भुञ्जतः
स्वारब्धानि निरीक्ष्य जीवनिचयान्मूढानविद्यावशान् ।
देवः कारुणिकोऽवतीर्य समशासद्यस्तु शारीरके
भाष्यं तं प्रणमामि शङ्करगुरुं निःश्रेयसावाप्तये ॥ १२५

தவறான அறிவால் விம்மி நிற்கிற உலகின் இடையே தம் தம் பிராரப்தவினை விளைவுகளை அனுபவித்து, அவித்யையின் வசப்பட்டு செய்வகையறியாத மக்களைக் கண்ட கருணாமூர்த்தியான ஈசன் சங்கரராக அவதரித்து சாரீரக பாஷ்யத்தை முக்தி பெறுவதற்கென எழுதினார். அவரை வணங்குகிறேன். (சாங்கரபாத பூஷணம்.) (125)

स्तुवन्मोहतमस्तोमभानुभावमुपेयुषः ।
स्तुमस्तान्भगवत्पादान् भवरोगभिषग्वरान् ॥ १२६

துதிப்பவரின் மதிமயக்க இருளை நீக்கும் ஸூரியனானவரும் பிறவிநோயின் சிறந்த மருத்துவருமான பகவத்பாதரைத் துதிப் போம். (ஸதாசிவப் பிரும்மேந்திரர். பிரும்ம ஸூத்ர விருத்தி.) (126)

नमामि शङ्कराचार्यगुरुपादसरोरुहम् ।
यस्य प्रसादान्मूढोऽपि सर्वज्ञोऽहं सदास्म्यहम् ॥ १२७

ஸ்ரீ சங்கராசாரியர் என்ற குருவின் திருவடித் தாமரையை வணங்குகிறேன். அதன் அருளால் மூடனான நானும் எல்லாமறிந்தவனானேன். (ஆனந்தகிரி சங்கர விஜயம்.) (127)

यो लोकोपकृतिप्रविष्टहृदयो जित्वातिबाह्यं मतं
श्रीमच्छङ्करशब्दपूर्वभगवत्पादाभिधानं गतः ।
सद्वेदान्तरहस्यवत्स्फुटितवान् गोप्यं रहो मानवं
तं वन्दे भगवन्तमन्तकरिपुं सर्वान्तरायच्छिदम् ॥ १२८

யமனின் எதிரியான சிவன் உலகிற்கு உதவுவதில் முனைந்தவராகி, வேதநெறிக்குப் புறம்பான கொள்கைகளை ஸ்ரீ சங்கர பகவத்பாதர் என்ற பெயர் கொண்டு வென்று மறைபொருளான வேதாந்த ரஹஸ்யத்தை மனிதனுக்கு விளக்கினார். இடையூறுகள் அனைத்தையும் களைந்த அந்த பகவானை வணங்குகிறேன். (ஸௌந்தர்ய லஹரீ - அருணாமோதினீ உரை. (128)

यत्पादाब्जप्रभवविमलश्रीपरागालिभास्वान्
मत्स्वान्तस्थं प्रणुदति तमःपुञ्जमत्यन्तचण्डम् ।
यत्कारुण्यप्लवपरिजुषा तारितोऽनेन तूर्णं
संसाराब्धिः प्रणतिरनिशं स्याद्गुरूणां पदाब्जे ॥ १२९

ஸ்ரீ சங்கர குருவின் திருவடித் தூசிக் குவியலாகிற சூரியன் என் உள்ளத்திலுள்ள அறியாமையாகிற இருளை வெளியேற்றுகிறது. ஸம்ஸாரக்கடல் கருணையாகிற ஓடத்தால் கடக்கப் பெறுகிறது. அந்தக் குரு நாதர்களின் திருவடித் தாமரையில் என் வந்தனம். (வேதாந்த கௌஸ்துபம்) (129)

वेदान्तव्रातनीरं शतपथकथितन्यायरत्नप्रपूरं
पारावारं सुतारं निगममुखषडङ्गात्मसद्ग्राहघोरम् ।
कारंकारं सुगाहं श्रुतिमतमथितैर्ब्रह्मविद्यामृतं यः
प्रादादादाय तस्मादशरणशरणं शङ्करं तं नमामः ॥ १३०

அது ஒரு கடல். உபநிஷத்துகளே அதன் நீர். சதபதப்ராம்ஹணத்தில் கூறிய நியாயங்களே அதிலுள்ள ரத்னக் குவியல். வேதங்களின் முகமான சிக்ஷை முதலிய ஆறு அங்கங்களும் அதிலுள்ள முதலைகள். அதில் ஆழ்ந்து வேதமத்தைக் கொண்டு கடைந்து பிரும்ம வித்யை என்ற அமுதத்தை எடுத்துத் தந்த சங்கரர் புகலிடமற்றவரின் புகலிடம். அவரை வணங்குவோம். (ஸுரேச்வரவார்த்திக டீகை - நியாய கல்பலதிகா) (130)

ये वेदान्तसुधोदधिं सुमनसां निश्श्रेयसाय स्वयं
निर्मथ्योदहरन्निरूपणगुणावृत्तेन चेतोमथा।
अद्वैतामृतमासुरानुशयिनामास्वादनीयेतरत्
तानास्माकगुरोरुपैमि भगवत्पादादिमान् देशिकान्॥ १३१

நமது குருவரருக்கும் வழிகாட்டிகளான பகவத்பாதர் முதலிய குருவரர்களை அணுகுகிறேன். நல்மனம் கொண்டவரின் நலனுக்காக வேதாந்தம் எனும் அமுதக்கடலை விளக்கம் என்ற உள்ளத்தைக் கடைகிற மத்தால் கடைந்து அத்வைதம் எனும் அமுதத்தைக் கொண்டு தந்தனர். அஸுர எண்ணம் கொண்டவரால் ருசி பார்க்கத்தகாதது. அந்த குருவரர்களை அணுகுகிறேன். (ஸித்தாந்த ஸித்தாஞ்சனம்.) (131)

संसाराब्धिनिषण्णाज्ञनिकरप्रोज्जिहीर्षया
कृतसंहननं वन्दे शङ्करं लोकशङ्करम्॥ १३२

உலகிற்கு நலம் புரிகிற சங்கரர் ஸம்ஸாரமெனும் கடலில் மூழ்கிய அறிவாளிகளின் கூட்டத்தைக் கரை ஏறச் செய்வதில் முனைந்தவர். அவரை வணங்குகிறேன். (பஞ்சபாதிகை உரை) (132)

काले शिवः क्रमवशात् कलिदोषदुष्टे
यस्संप्रदायरहितं तदपेक्ष्य भूयः।
क्षोण्यामवातरदशेषजगद्धितार्थी
श्रीशङ्कराख्यममलं गुरुमाश्रये तम्॥ १३३

கலியின் குறைகளால் மாசடைந்த காலத்தில் வழிமுறைக்கான வழக்கம் நலிந்துள்ளதைக் கண்டு, உலகமனைத்தின் நலம் கருதி பூமியில் அவதரித்த ஸ்ரீ சங்கரர் என்ற குருவை அண்டி நிற்கிறேன். (பிரபஞ்சஸாரார்த்த தீபம்.) (133)

वेदाद्यागमदुग्धसिन्धुमथनात्तन्मेयमन्थाद्रिणा
दिव्याभोगविचारवासुकिवशादाश्रित्य धैर्यं परम् ।
ब्रह्मोद्बोधसुधां विधाय दयया मर्त्यानमर्त्यानमी
कुर्वन्तो गुरवो जयन्ति जगतां लक्ष्मीशवद्रक्षकाः ॥ १३४

வேதம் முதலிய பிரமாண நூல்களாகிய பாற்கடலை பிரமேய (உணர வேண்டிய தத்வ)மெனும் மத்தான மலையால் தெய்வத் தன்மையின் ஆராய்வாகிற வாஸுகி என்ற கடைகிற கயிற்றால் பெரும் உறுதியுடன் கடைந்து, பிரும்மஜ்ஞானம் என்ற அமுதத்தை எடுத்து கருணையுடன் அளித்து சாவதை இயல்பாகக் கொண்ட மக்களைச் சாவற்றவராக்கிய அந்த குருவரர்கள் லக்ஷ்மியின் ஈசனை விஷ்ணு போன்று ரக்ஷிப்பவராக விளங்குகிறார்கள். (கண்டனமண்டனம்) (134)

यद्वक्त्राम्बुजनिस्सृतं परमकं श्रीसूत्रभाष्यामृतं
पीत्वा मादृशजीवभङ्गनिचया नन्दन्ति मोक्षाङ्गणे ।
नानावादिमदेभभञ्जनमहाव्यग्रोग्रकण्ठीरवान्
वन्दे व्यासमुनीन्द्रशङ्करमुखान् सद्देशिकांस्तानहम् ॥ १३५

வியாஸர் சங்கரர் முதலிய நல்ல ஆசாரியர்களை வணங்குகிறேன். பல மதவாதிகளான மதம் பிடித்த யானைகளை அழிக்கிற உக்கிரமான சிங்கங்கள் அவர்கள். அவர்களது வாக்கிலிருந்து வெளியான மேலான ஸூத்ர பாஷ்யம் என்ற அமுதத்தைப் பருகிய என்னைப் போன்ற ஜீவர்களின் கூட்டம் முக்தி அரங்கில் ஆனந்தமாக உள்ளது. (அஜ்ஞானத்வாந்த சண்ட பாஸ்கரம்) (135)

श्रीमच्छङ्करसद्गुरोर्भगवतोऽगाधामसाधारणीं
वाणीं नः प्रतनीयसीं मुहुरिमां गाढुं समुत्कण्ठते ।

तन्मूर्तिः प्रभुरेव भक्तजनतावात्सल्यवैपुल्यभूः
अस्मै साधु ददातु शस्तदयया हस्तावलम्बं हरः ॥ १३६

பகவானுன சீர்மிக்க சங்கரர் என்ற ஸத்குருவின் வாக்கு ஆழம் காணமுடியாதது. காணக்கிடைக்காதது. அந்த மென்மைமிக்க வாக்கில் அடிக்கடி ஆழ்ந்து நிற்க இவன் பெரிதும் ஆர்வமுள்ளவன். பக்தர்களாகிய மக்களிடம் பேரன்பு கொண்ட அந்த பிரபு சிவன் தன் சிறந்த தயையால் நன்கு கைப்பிடி தரட்டும். (ஆசாரிய திக் விஜயம்) (136)

संसाराध्वनि तापभानुकिरणप्रोद्भूतदाहव्यथा-
खिन्नानां जलकांक्षया मरुभुवि भ्रान्त्या परिभ्राम्यताम् ।
अत्यासन्नसुखाम्बुधिं सुखकरं ब्रह्माद्वयं दर्शय-
न्त्येषा शङ्करभारती विजयते निर्वाणसन्दायिनी ॥ १३७

ஸம்ஸாரமெனும் பெருவழி. தபிக்கிற சூர்ய கிரணத்தால் உண்டான எரிச்சலால் துன்புற்றவனுக்கு. பாலைவனத்தில் பாதை தெரியாமல் மயங்கிச் சுற்றிச் சுற்றி வருபவனுக்கு. பருகநீர் வேண்டித் துயருற்றவருக்கு, மிக அருகிலுள்ள இன்பக் கடலான இன்பம் தருகிற இரண்டற்ற பிரும்மத்தைக் காட்டுகிற சங்கரரின் வாக்கு பெருநிம்மதியளிப்பதாக விளங்குகிறது. (விவேக சூடாமணி) (137)

यद्भाष्याम्बुजजातजातमधुरप्रेयोमधुप्रार्थना-
सार्थव्यग्रधियः समग्रमरुतः स्वर्गेऽपि निर्वेदिनः ।
यस्मिन्मुक्तिपथःपथीनमुनिभिः संप्रार्थितः संबभौ
तस्मै भाष्यकृते नमोऽस्तु भगवत्पादाभिधां बिभ्रते ॥ १३८

பகவத்பாதர் என்ற பெயரைத் தாங்குகிற பாஷ்யகாரருக்கு வணக்கம். இவரது பாஷ்யம் என்ற தாமரைக் கூட்டத்திலிருந்து தோன்றிய இனிய மிகப் ப்ரியமான தேனை வேண்டி அதனைப் பெறமுயன்ற ஸ்வர்க்கத்திலுள்ள தேவர்கள் அனைவரும் அது கிடைக்காததால் சோர்ந்துள்ளனர். (ஆனந்தகிரியின் ஸூத்ர பாஷ்ய உரை.) (138)

तं वन्दे शङ्कराचार्यं लोकत्रितयशङ्करम् ।
सत्तर्कनखरोद्दीर्णवावदूकमतङ्गजम् ॥ १३९

மூவுலகத்திற்கும் நலம் செய்கிற சங்கராசாரியரை வணங்குகிறேன். வீண்வாதம் புரிபவராகிய யானையை நல்ல யுக்திவாதமெனும் நகத்தால் கிழித்தவர் அவர். (தத்வபோதம்) (139)

महामोहपङ्के विरिञ्चाचरान्तं
प्रजाहस्तिनं मग्नमालोक्य भाष्यैः ।
जलैः क्षालयित्वाऽऽत्मविद्यादिवं यो
नयत्येकलं शङ्करं तं नमामि ॥ १४०

பிரும்மாவிலிருந்து அசையாப் பொருள்வரை மக்களாகிய யானை பெரும் மதிமயக்கம் என்ற சேற்றில் மூழ்கியதைக் கண்டு, பாஷ்யம் எனும் நீரால் கழுவி ஆத்மவித்யை என்ற ஸ்வர்கத்திற்கு இட்டுச் செல்கிற ஒரே மனிதரான சங்கரரை வணங்குகிறேன். (நைஷ்கர்ம்ய ஸித்தி விவரணம்) (140)

आनन्दघनमद्वन्द्वं निर्विकारं निरञ्जनम् ।
भजेऽहं भगवत्पादं भजतामभयप्रदम् ॥ १४१

பகவத்பாதர் ஆனந்தச் செறிவு மிக்கவர், போட்டியில்லாதவர், மாறுபாடடையாதவர். அப்பழுக்கில்லாதவர். வழிபடுபவருக்கு அபயமளிப்பவர். அவரை வழிபடுகிறேன். (மநீஷா பஞ்சக உரை) (141)

वेदान्तार्थाभिधानेन सर्वानुग्रहकारिणम् ।
यतिरूपधरं वन्दे शङ्करं लोकशङ्करम् ॥ १४२

உபநிஷத்துக்களின் பொருளை விளக்கி அனைவருக்கும் அருள்புரிந்து துறவிவேஷத்தில் உலகிற்கு நலம் புரிந்த சங்கரரை வணங்குகிறேன் (ஹரிஹராத்வைத பூஷணம்.) (142)

पाराशर्यवचोविलासमसृणैः सूत्रैः क्रमेणाततैः
रत्यस्त्यैः प्रकटीचकार भगवान् यो भाष्यसंज्ञं पटम् ।
अज्ञानोद्भवजाड्यनाशकरणं स्वानन्ददं सेविनां
तं वन्देऽखिलयोगिवन्द्यचरणं श्रीशङ्करं शङ्करम् ।। १४३

வியாஸரின் வாக்கின் அழகு நிறைந்த ஸூத்ரங்கள் என்ற நூல்கள் வரவர நீண்டு கொண்டிருப்பவை. அவற்றை ஊடும்பாவுமாக அமைத்து பாஷ்யமென்ற ஆடையை சங்கரர் உருவாக்கினார். அது, பயன்படுத்துபவருக்கு அறியாமையால் ஏற்பட்ட ஜடத்தன்மையை அகற்றி ஆனந்த உணர்வு தரக்கூடியது. அனைத்து யோகிகளாலும் திருவடிகளில் வணங்கப் பெற்ற வரும் ஸ்ரீ சங்கர பகவத்பாதராக ஆன (அனைவரையும் பெரும் சீரும் பலமும் பெறச் செய்பவரான) சங்கரரை வணங்குகிறேன். (ஆனந்த விலாஸம்) (143)

प्रचण्डपाखण्डविखण्डनोद्यतं त्रयीशिरोर्थप्रतिपादने रतम् ।
बुधैर्नुतं योगकलाभिरावृतं नमामि तं शङ्करदेशिकं ततम् ।। १४४

சங்கரர் என்ற நல்வழி போதிப்பவர். வெறிபிடித்த நாஸ்திகர்களை அடக்க முனைந்தவர். உபநிஷத்தின் பொருளை விளக்குவதில் ஆர்வம் கொண்டவர். பேரறிஞரால் பாராட்டப்பெற்றவர். அந்த சங்கராசாரியரை வணங்குகிறேன். (ஸ்ரீ ஸச்சிதானந்த ஸரஸ்வதீ) (144)

सर्वतन्त्रस्वतन्त्राय सदात्माद्वैतरूपिणे ।
श्रीमते शङ्करार्याय वेदान्तगुरवे नमः ।। १४५

எல்லா சாஸ்திரங்களிலும் (செயல் முறைகளிலும்) தன்னிச்சையாகத் திறமை காட்டுபவரும் ஸத்தான ஆத்மாவுடன் அத்வைதமாக ஒன்றியிருப்பவரும் சீர்மிக்கவருமான சங்கராசாரியர் என்ற வேதாந்த ஆசிரியருக்கு வந்தனம். (145)

यद्वैदिका बोधयितुं सहस्रं शब्दाः प्रवृत्ता इति नेति नेति ।
तच्छङ्करानन्दसरस्वतीति ख्यातं परं दैवतमाश्रयामः ।। १४६

ஆயிரக்கணக்கான வேத சப்தங்கள் விளக்க முயன்று இது அல்ல இது அல்ல என என்றே விளக்கின. (இது தான் என அவற்ருல் நேரிடையாக அந்த பிரும்மத்தை விளக்க இயலவில்லை.) இந்த சங்கரர் என்ற குருவும் அவ்வாறே சங்கரர், ஆனந்த வடிவினர், ஸரஸ்வதியே எனக் கூறலாம் அந்தப்பெரும் தெய்வத்தை அண்டி நிற்போம். (சங்கர மந்தார ஸௌரபஸமீரம். (146)

श्रीगौरीनाथतत्त्वं सकलमुनिकृतं वेदवेदान्तवेद्यं
साक्षात्कैवल्यरूपं विधिहरिनमितं भोगमोक्षप्रदं च ।
सत्यज्ञानादिरूपं प्रकटितमकरोत् ब्रह्मनिर्वाणमेकं
वन्देऽहं सेवकानामखिलसुखकरं शङ्कराचार्यमूर्तिम् ॥ १४७

ஸ்ரீ சங்கராசார்யர் வடிவில் வந்த சிவன் தன்னைப் பணிபவருக்கு நலமனைத்தையும் தருபவர். ''மேனி போன்ற அடையாள மேதுமற்றது. அதனுல் அது நிர்வாணம். அது எங்கும் நீக்கமற நிரம்பிய பிரும்மம். அது ஒன்றே. (அதைத்தவிர வேறேதுமில்லை) அது கௌரீ மணுளரின் உண்மை நிலை. வேத - உபநிஷத்துகளால் உணரத்தக்கது. அது ஒன்றே என்ற கேவலத் தன்மையின் வடிவம். பிரும்மாவும், விஷ்ணுவும் அதனை வணங்குவர், இம்மையில் இன்பமும் இறுதியில் முக்தியும் தருவது. ஸத்யம் ஜ்ஞானம் அநந்தம் ஆனந்தம்'' எனக் குறிப்பிடப் பெறுவது. இதனை விளக்கிய சங்கரரை வணங்குகிறேன். (வாமனர்) (147)

श्रीमच्छङ्करसद्गुरोर्भगवतोऽगाधामसाधारणीं
वाणीं नः प्रतनीयसीं मुहुरिमां गाढुं समुत्कण्ठते ।
तन्मूर्तिः प्रभुरेव भक्तजनतावात्सल्यवैपुल्यभू-
रस्मै साधु ददातु शस्तदयया हस्तावलम्बं हरः ॥ १४८

சீர்மிக்க ஸத் குருவும் பகவானுமான சங்கரரின் ஆழ்ந்த - தனிச்சிறப்புற்ற - மென்மைமிக்க இந்த வாக்கில் ஆழ்ந்து நிற்க மனம் ஏங்கி நிற்கிறது. அவ்வடிவில் வந்த சிவன் பேராண்மையும் பக்தர்களான மக்களின் மீது பேரன்பும் பரிவும் கொண்டவர். அவர்

இவனுக்கு ஆசாரியரின் வாக்கை அனுபவிக்கத் தக்கப்பரிவுடன் கை கொடுக்க வேண்டும். (ஆசாரிய திக் விஜயம்) (148)

देशे कालटिनाम्नि केरलधराशोभाकरे सद्विजे
जातः श्रीपतिमन्दिरस्य सविधे सर्वज्ञतां प्राप्तवान् ।
भूत्वा षोडशवत्सरे यतिवरो गत्वा बदर्याश्रमं
कर्ता भाष्यनिबन्धनस्य सुकविः श्रीशङ्करः पावनः ॥ १४९

கேரள நாட்டை அழகுறச் செய்கிற அந்தணர் வசிக்கிற காலடி என்ற ஊரில் ஸ்ரீபதியான கிருஷ்ணனின் கோயிலருகே தோன்றிய சங்கரர் பதினாறு வயதுக்குள் எல்லாமறிந்தவராகி துறவு பூண்டு பதரிகாசிரமமடைந்து பாஷ்யத்தை இயற்றினார். அந்தக் கவி அனைத்தையும் தூயதாக்குபவர் - (கோவிந்தானந்தரின் சங்கராசார்ய சரிதம்) (149)

श्रीगुरुं भगवत्पादं शरण्यं भक्तवत्सलम् ।
शिवं शिवकरं शुद्धमप्रमेयं नमाम्यहम् ॥ १५०

அவர் சிவன். மங்களமாகச் செய்பவர், புகலடையச் சிறந்த இடம். பக்தரிடம் அன்பு கொண்டவர், தூயவர், இன்னார் எனக் குறிப்பிட இயலாதவர். அந்த ஸ்ரீ குருவான பகவத்பாதரை வந்தனம் செய்கிறேன். (குர்வஷ்டகம்) (150)

योऽयं दैवतसार्वभौमविभवो विश्वाधिको रुद्रइ-
त्याद्यै र्ह्याद्यवचोभिरद्वयपरैरद्यापि संस्तूयते ।
अद्वैतात्मविबोधनाय विदुषामिच्छासमङ्गीकृत-
श्रीमच्छङ्करदेशिकेन्द्रवपुषं श्रीशङ्करं भावये ॥ १५१

தேவதைகளின் பேராளுனர். உலகிற்கு அப்பாற்பட்டவர், ருத்ரர் என வேதவாக்குகளால் இன்றும் துதிக்கப் பெறுபவர். தன்னிச்சைப் படி பேரறிஞர்களுக்கு அத்வைதமான ஆத்மநிலையைப் போதிப்பதற்கென ஸ்ரீ சங்கராசாரியப் பெருந்தகைவடிவேற்றவர். அந்த சங்கரரான சிவனை தியானிக்கிறேன். (ஸ்ரீ சங்கராசார்யாஷ்டகம்) (151)

यत्पादपङ्कजध्यानाल्लक्ष्मणाद्या यतीश्वराः ।
बभूवुस्तादृशं वन्दे शङ्करं षण्मतेश्वरम् ॥ १५२

இவரது திருவடிகளின் தியானத்தால் லக்ஷ்மணர் முதலியவர் துறவி வேந்தர்களானுர்கள். அந்த ஆறு மதங்களுக்கும் ஈசரான சங்கரரை வணங்குகிறேன். (உத்தர கீதா டீகை) (152)

केमे शङ्करसद्गुरोर्गुणगणाः दिग्जालकूलङ्कषाः
कालोन्मीलितमालतीपरिमलावष्टम्भमुष्टिन्धयाः ।
क्वाहं हन्त तथापि सद्गुरुकृपापीयूषपारम्परी-
मग्नोन्मग्नकटाक्षवीक्षणबलादस्मि प्रशस्तोऽर्हताम् ॥ १५३

அந்த திக்குகளின் எல்லை வரை ஆழப்பதிந்தவையும் காலத்தில் மலர்ந்த மல்லிகையின் மணம் கொண்டவையும் ஆன சங்கரரின் குணங்களின் கூட்டமெங்கே ? நான் எங்கே ? எனினும் ஸத்குருவின் அமுதம் போன்ற கருணையலையில் நனைந்து மூழ்கி வெளிவந்த கடாக்ஷப்பார்வை வலிவால் தகுதியுள்ளவர்களின் முன் நிற்கிறேன்.
(ஸம்க்ஷேப சங்கர விஜயம்) (153)

त्रिवर्गेणाक्रान्ते जननमरणादिव्रणभुवा
जनेऽस्मिन् सर्वस्मिंस्तिमिरपरिणाहैकशरणे ।
निषेक्तुं निध्यातोऽमृतमगपतिः शङ्कर इति
स्वनाम व्याख्यातुं जयति कुहनाभिक्षुरनिशम् ॥ १५४

மக்கள் அனைவரும் தர்ம அர்த்த காமங்களில் சிக்கியதால் பிறப்பிறப்பு முதலியவற்ருல் புண்ணுகி அறியாமை இருட்டிலேயே சுழல நேர்ந்த மக்களுக்கு அமுததாரை வழங்க மக்களால் தியானிக்கப் பெற்ற சங்கரர் (சிவன்) கிரீசன். சங்கரர் எனத் தன் பெயரை முன் வைத்துத்துறவி வேஷம் பூண்டவர். அவர் எப்போதும்

ஓங்கி நிற்கிருர். (அபிநவ திரவிடாசார்ய பால கிருஷ்ணுநந்த ஸரஸ்வதீ.) (154)

श्रीभाष्यकृच्चरणसारसमादरेण योगीन्द्रबृन्दमधुपैरुपगीयमानम् ।
सद्भागधेयमखिलार्थनिदानभूतं कैवल्यपुष्परससंभृतमानतोऽस्मि ।। १५५

யோகிகளில் சிறந்தவர் என்ற வண்டுகளால் சுற்றி வந்து பாடப்பெறுவது. நல்லோரின் பாக்கிய உருவானது. தர்மம் முதலிய புருஷார்த்தங்களைப்பெற உதவுகிற மூலப்பொருள், முக்தி என்ற பூந்தாது நிரம்பியது அந்த பாஷ்யகார சங்கரரின் திருவடியாகிற தாமரையை வணங்கி நிற்கிறேன். (ஷட்பதீ - சங்கரானந்தர் உரை.) (155)

श्रुतीनामाक्रीडः प्रथितपरहंसोचितगतिः
निजे सत्ये धाम्नि त्रिजगदतिवर्तिन्यभिरतः ।
असौ ब्रह्मैवास्मिन् न खलु विशये किन्तु कलये
बृहेरर्थं साक्षादनुपचरितं केवलतया ।। १५६

வேதங்கள் விளையாடுமிடம், புகழ்பெற்ற பரமஹம்ஸரின் நடைமுறை கொண்டவர். மூவுலகிற்கும் அப்பாற்பட்ட ஆத்மாவின் ஸத்ய நிலையில் ஆழ்ந்தவர். இவர் பிரும்மமே. இதில் ஐயப்படேன். பிரும்ஹ என்ற சொல்லின் மூலமான பிருஹி என்ற வினைச்சொல் உபசாரச் சொல்லாக இவரிடம் பதியாது. (குர்வஷ்டகம்) (156)

क्षीरं ब्रह्म जगच्च नीरमुभयं तद्योगमभ्यागतं
दुर्भेदं त्वितरेतरं चिरतरं सम्यग्विभक्तीकृतम् ।
येनाशेषविशेषदोषलहरीमासेदुषीं शेमुषीं
सोऽयं शीलवतां पुनाति परमो हंसो द्विजात्यग्रणीः ।। १५७

பிரும்மம் - பால் உலகம் நீர். இரண்டும் இரண்டறக் கலந்து எளி இணைந்து எளிதில் பிரிக்க இயலாது. அந்தணரில் சிறந்த சங்கரர் என்ற இந்த பரமஹம்ஸர் (அன்னப்பறவை) இரண்டையும் நன்கு

பிரித்துக்காட்டி மாசுபடிந்த அறிவைத் துலக்கினார். (குர்வஷ்டகம்)
(157)

षट्पदीनौकया सर्वानुद्दधार नतोऽस्म्यहम् ।
संसारसागरे मग्नान् यस्तं शङ्करदेशिकम् ॥ १५८

பிறவிக்கடலில் மூழ்கியவரனைவரையும் ஷட் பதீ என்ற ஓடத்தில் ஏற்றி அமர்த்திக் கரையேறச் செய்த சங்கர குருவை வணங்கி நிற்கிறேன். (158)

वेदान्तार्थाभिधानेन सर्वानुग्रहकारिणम् ।
यतिरूपधरं वन्दे शङ्करं लोकशङ्करम् ॥ १५९

வேதமுடிவான உபநிஷத்தின் பொருளை விளக்கி அனைவருக்கும் அருள் புரிந்த - துறவி உருவத்தில் வந்த - உலகின் நன்மை புரிகிற சங்கரரை வந்தனம் செய்கிறேனே. (வியாஸாசலீய சங்கர விஜயம்.) (159)

मेधावी निगमपटुर्बहुश्रुतो वा येनर्ते न कलयिता किलात्मतत्त्वम् ।
तन्नेत्रं तमसि च दिव्यदृष्टिदायि श्रेयो नः प्रदिशतु धाम देशिकाख्यम् ॥
१६०

ஆசாரியர் என்ற கண் அது. பெரும் மேதாவியும் வேதமறிந்தவனும் குருவிடம் பலவற்றைக் கேட்டறிந்தவனும் இக்கண்ணின் பார்வை பெருமல் ஆத்ம தத்துவத்தை உணர இயலாது. அறியாமை எனும் காரிருளில் திவ்ய திருஷ்டி தரவல்லது. அந்தப் பெரும் பொருள் நமக்கு நலம் வழங்கட்டும். (புண்யசுலோகமஞ்ஜரீ)
(160)

सर्वतन्त्रस्वतन्त्राय सदात्माद्वैतरूपिणे ।
श्रीमते शङ्करार्याय वेदान्तगुरवे नमः ॥ १६१

எல்லா சாஸ்திரங்களிலும் ஸ்வதந்திரத்துடன் விளக்கம் தருபவரும் பேரிருக்கையான ஆத்மாவுடன் ஒன்றிய அத்வைத நிலை உருவமானவரும் வேதாந்தத்தின் குருவுமான சீர்மிக்க சங்கரப் பெருந்தகைக்கு வந்தனம் (சங்கர மந்தார ஸௌரபம்) (161)

नमः श्रीशङ्कराचार्यगुरवे शङ्करात्मने ।
शरीरिणां शङ्कराय शङ्करज्ञानहेतवे ।। १६२

சிவனது ஸ்வரூபமும் ஜீவர்களுக்கு நலம் வழங்குபவரும் நலமிக்க ஜ்ஞானத்தின் மூலப்பொருளுமான ஸ்ரீ சங்கராசார்ய குருவிற்கு வந்தனம். (ஸம்க்ஷேப சாரீரகம் - டீகை) (162)

यदीयभाष्यकमलस्यन्दमानमरन्दतः ।
विद्वद्भृङ्गस्तृप्तिमेति शङ्करं तमुपाश्रये ।। १६३

பேரறிஞர்களாகிய வண்டு இவரது பாஷ்யமெனும் தாமரையிலிருந்து கசிகிற பூந்தாதுவைச் சுவைத்து மனநிறைவு பெறுகிறது. அந்த சங்கரரை அணுகிநிற்கிறேன். (கிரணாவளி) (163)

श्रीसंबन्धमुदीक्ष्य वाचकपदे यान् शार्ङ्गिणं वैष्णवाः
चन्द्रोत्तंसपदास्पदत्वकलनाच्छम्भुं च शैवा विदुः ।
आनन्दाद्वयशोभमानपरमप्रेमास्पदं योगिन-
स्तान् पादाम्बुजरेणुधूततमसो वन्दे सदा श्रीगुरून् ।। १६४

ஸ்ரீ சங்கர பகவத்பாதர் என்ற பெயரில் ஸ்ரீ-லக்ஷ்மியின் தொடர்பு இருப்பதால் வைஷ்ணவர் இவரை விஷ்ணு என்பர். சங்கரர் என்பது பிறைசூடியான சிவனைக் குறிப்பதால் சைவர் இவரைச் சிவன் என்பர். இரண்டற்ற பேரானந்த நிலையான பேரன்புக்குரிய பொருள் என்பர் யோகியர். தன் திருவடித் தூசியால் அஜ்ஞான இருளை நீக்குகிற ஸ்ரீ குருவை வந்தனம் செய்கிறேன். (கங்காதரேந்த்ர ஸரஸ்வதீ) (164)

अधिगतभिदा पूर्वाचार्यानुपेत्य सहस्रधा
सरिदिव महीभागान् संप्राप्य शौरिपदोद्गता ।
जयति भगवत्पादश्रीमन्मुखाम्बुजनिर्गता
जननहरणी सूक्तिर्ब्रह्माद्वयैकपरायणा ॥ १६५

விஷ்ணுவின் திருவடிகளிலிருந்து வெளியான ஒரே நதி பூமியின் பல பகுதிகளில் பாய்ந்து ஓடிப் (பல பெயர்களையும் வடிவையும் பெற்று) வேறுவேருகக் காட்சி தருவது போல் பகவத்பாதரின் தாமரை போன்ற சீர்முகத்திலிருந்து வெளிப்பட்ட பிரும்மம் அத்விதீயம் என்பதை விளக்குவதில் முனைந்த திருவாய்மொழி மறுபிறப்பை அகற்றுவதாக விளங்குகிறது. (அப்பய தீக்ஷிதர்) (165)

बध्नीमो यमिनां वराय बहुधा तस्मै प्रणामाञ्जलिं
पुंसः पादनतस्य मोहविरतिं निर्माय निर्मायया ।
दृष्ट्या शीतलया दयासरसया बन्धं निराकुर्वते
प्रत्यक्तत्त्वमवाप्य सर्वगुणसान्निध्याय निध्यायते ॥ १६६

தன் திருவடிகளில் வணங்கிய மனிதனுக்கு மாயையை அகற்றவல்லதும் தயைததும்புவதும் குளிர்ந்ததுமான பார்வையால் மதிமயக்கத்தை நீக்கி, பிறவிக்கட்டை நீக்குபவரும் உள்நோக்கால் தத்வத்தை உணர்ந்து அனைத்துச் சிறப்புகளும் துலங்கத் தியானிப்பவருமான துறவியரசருக்கு வணக்கம்முன்னிட்ட அஞ்சலியைப் பலதடவை செய்வோம். (பகவத் பாதஸப்ததி) (166)

वेदान्तार्थविभासकाय यतये शान्ताय सन्यासिने
नानावादिनगेन्द्रसंघपवये योगीन्द्रवन्द्याय च ।
मोहध्वान्तदिवाकराय भगवत्पादाभिधां बिभ्रते
तस्मै भाष्यकृते नमोऽस्तु सततं पूर्णाय बोधात्मने ॥ १६७

அந்த பாஷ்யகாரர் உபநிஷத்தின் பொருளை விளக்குபவர், துறவி. அமைதியுற்றவர். பலவாதிகளாகிற மலைகளை வஜ்ராயுதமாகிச் சிதைத்தவர். சிறந்த யோகிகளின் வணக்கத்திற்கு உரியவர், மதிமயக்கம் எனும் இருளிற்கு சூரியன். பகவத்பாதர் எனப்பெயர் கொண்டவர். பூர்ணர்,ஆத்ம உணர்வின் வடிவானவர். அவருக்கு வந்தனம். (தைத்திரீய பாஷ்ய - டீகை) (167)

यो वै मण्डनमिश्रविद्वदधिपस्यापाद्य सन्न्यासितां
तन्मूर्ध्नि व्यसनापनोदनविधावाकर्षयन्नश्विनौ ।
भैषज्यं कलयांबभूव कुपितस्येन्द्रस्य वज्रायुधं
चूर्णीकृत्य पुनर्ददौ हरिपदे चक्रे तमेनं भजे ।। १६८

மண்டனமிச்ரர் (விசுவரூபர்) என்ற பேரறிஞரைத் துறவியாக்கி அவரது தலைவலி தீர அசுவினி தேவர்களை மந்திர சக்தியால் அருகில் கொணர்ந்து மருத்துவம் செய்து நோய் நீக்கினார். அவர்களிடம் கோபித்த இந்திரனால் ஏவப்பெற்ற வஜ்ராயுதத்தைத் தூளாக்கினார். மறுபடி அதைச் சீராக்கி இந்திரனை அவன் பதவியில் இருக்கச் செய்தார். அந்த இவரை வழிபடுகிறேன். (வாஸநாதே ஹஸ்துதி) (168)

गामाक्रम्य पदेऽधिकाञ्चि निबिडं स्कन्धैश्चतुर्भिस्तथा
व्यावृण्वन् भुवनान्तरं परिहरंस्तापं समोहज्वरम् ।
यः शाखी द्विजसंस्तुतः फलति तत्स्वाद्यं रसाख्यं फलं
तस्मै शङ्करपादपाय महते तन्मस्त्रिसन्ध्यं नमः ।। १६९

சங்கரர் என்ற பெருமரம். காஞ்சியில் அதுவேர் பிடித்தது. நான்கு அடிக்கிளைகள். இவற்றால் பாரதபூமியை வியாபித்தது. மதிமயக்கம் எனும் ஜ்வரம் அதன் தாபம் இவற்றைப் போக்கியது. அந்தணர்களால் பாராட்டப் பெற்றது. பிரம்மானந்தமே அதன் கனி. மூன்று வேளைகளிலும் அதற்கு வந்தனம். (வியாஸாசலீயம்) (169)

महात्रिपुरसुन्दरीरमणचन्द्रमौलीश्वर-
प्रसादपरिलब्धवाङ्मयविभूषिताशान्तरम् ।
निरन्तरमुपास्महे निरुपमात्मविद्यानदी-
नदीनदपतिप्रभं मनसि शङ्करार्यं गुरुम् ॥ १७०

மஹாதிரிபுர ஸுந்தரீரமணரான சந்திர மௌளீச்வரரது அருளால் பெற்ற வாக்கு வல்லமையால் திக்குகளின் இடைவெளியில் உள்ளதனைத்தையும் அழகுபடுத்தியவரும், ஈடிணையற்ற ஆத்மவித்யை எனும் நதிக்கு, நதிகளுக்கும் நதங்களுக்கும் பதியான ஸமுத்ர ராஜனைப் போன்றவருமான சங்கரார்யர் என்ற குருவை உள்ளத்தினுள் இடைநேரமின்றி வழிபடுவோம். (மார்க்கண்டேய ஸம்ஹிதை). (170)

## जयघोषः

### स्वामिन् ! जय !! विजयी भव !!!

श्रीशङ्कराचार्यवर्य ब्रह्मज्ञानप्रदायक ।
अज्ञानतिमिरादित्य सुज्ञानाम्बुधिचन्द्रमः ॥ १

ज्ञानमुद्राञ्चितकर शिष्यहृत्तापहारक ।
षण्मतस्थापनाचार्य त्रयीमार्गप्रकाशक ॥ २

*"ஸ்வாமி ! ஜய ! விஜயீபவ !"*

சிறந்த சங்கராசார்யரே ! பிரும்மஜ்ஞானத்தை அருள்பவரே ! அறியாமையிருளை ஸூர்யனாக அகற்றுபவரே ! நல்லறிவெனும் கடலைப் பொங்க வைக்கிற சந்திரனே ! ஞான முத்திரை காட்டுகிற கையுள்ளவரே ! சீடனின் உள்ளத்து தாபத்தை அகற்றுபவரே! காணபதம் சைவம், சாக்தம், வைஷ்ணவம், ஸௌரம், கௌமாரம் என்ற ஆறு மதங்களை நிலைநிறுத்திய குருவே ! வேதநெறி வழிகாட்டுபவரே ! (1-2)

प्रसन्नवदनाम्भोज परमार्थप्रकाशक ।
काषायवसनोपेत भस्मोद्धूलितविग्रह ॥ ३

ज्ञानात्मकैकदण्डाढ्य कमण्डलुलसत्कर ।
अद्वैतस्थापनाचार्य भगवत्पादसंज्ञक ॥ ४

தெளிந்த தாமரை போன்ற முகமுள்ளவரே! மேலான தத்துவத்தை விளக்குபவரே ! காவியுடை உடுத்தியவரே ! விபூதி பூசிய மேனியரே ! பேரறிவென்ற என்ற தண்டமேந்தியவரே ! கமண்டலுவால் அழகிய கையுள்ளவரே? அத்வைதத்தை ஸ்தாபித்த ஆசாரியரே ? பகவத்பாதர் என்ற அடையாளம் கொண்டவரே ? (3-4)

अष्टवर्षचतुर्वेदिन् द्वादशाखिलशास्त्रवित् ।
कम्रमुक्तिगृहद्वारकवाटघ्नपदाम्बुज ॥ ५

श्रीमत्कैलासनिलय सच्छिवांशावतारक ।
कालटीक्षेत्रनिवसदार्याम्बागर्भसंश्रित ॥ ६

எட்டு வயதில் நான்கு வேதங்களை கற்றவரே ! பன்னிரண்டு வயதிற்குள் சாஸ்திரங்களனைத்தையும் கற்றவரே ! உள்ளத்தைக் கவர்கிற முக்தி மாளிகை வாயிற் கதவைத் திறக்கிற தாமரை போன்ற திருவடி கொண்டவரே ! சீர்மிக்க கைலாஸவாஸியே ! பேரிருக்கைப் பொருளான சிவனது அம்சமாகத் தோன்றியவரே ! காலடியில் வசித்த ஆர்யாம்பிகையின் கருவறையில் தங்கியவரே ! (5-6)

शिवादिगुरुवंशाब्धिराकापूर्णसुधाकर ।
पितृदत्तान्वर्थभूतशङ्कराख्यासमुज्ज्वल ॥ ७

अभ्यस्तवेदवेदाङ्ग निखिलागमपारग ।
दरिद्रब्राह्मणीदत्तभिक्षामलकतोषित ॥ ८

சிவனை ஆதி குருவாகக் கொண்ட குரு பரம்பரையாகிற கடலுக்கு ஆனந்தம் தருகிற பௌர்ணமி சந்திரனே ! தந்தை தந்த பொருள் பொதிந்த சங்கரர் என்ற பெயரால் ஒளிர்பவரே ! வேதங்களையும் வேதாங்கங்களையும் ஓதிக்கற்றவரே ! ஆகமங்களனைத்தின் கரை கண்டவரே ! ஏழை அந்தணமாது கொடுத்த நெல்லிக்கனி பிக்ஷையால் மகிழ்ந்தவரே ! (7-8)

स्वर्णधारास्तुतिप्रीतरमानुग्रहभाजन ।
स्वर्णामलकसद्वृष्टिप्रसादानन्दितद्विज ॥ ९

सरिद्वर्त्मातपश्रान्तमातृदुःखापनोदक ।
नक्रग्रहव्याजमातृमतपारमहंस्यक ॥ १०

शप्तगन्धर्वनक्रत्वपरिहर्तृपदाम्बुज ।
चिन्तनामात्रसान्निध्यकरणाश्वासिताम्बक ॥ ११

கநகதாரா ஸ்தோத்திரத்தால் மகிழ்ந்த லக்ஷ்மீதேவியின் அருளைப் பெற்றவரே ! தங்க நெல்லிக்கனி மழையால் அந்தணரை

(அந்தணமாதுலை) மகிழ்வித்தவரே! ஆற்றிற்குச் செல்லும் வழியில் வெப்பத்தால் களைத்த தாயின் துயரை நீக்கியவரே ! முதலை கவ்வியதான சாக்கில் தாயிடமிருந்து துறவுக்கான அனுமதி பெற்றவரே ! சாபம் பெற்ற கந்தர்வனின் முதலை நிலையை நீக்கிய திருவடித் தாமரை கொண்டவரே! நினைத்த உடன் அருகிலிருப்பதாக உறுதி கூறித் தாயை சமாதானப் படுத்தியவரே! (9-11)

सोमोद्भवातटीक्लृप्तसौम्यगोविन्दसेवन ।
गोविन्दार्यमुखावाप्तमहावाक्यचतुष्टय ॥ १२

योगसिद्धिगृहीतेन्दुभवापूरकमण्डलो ।
गुर्वनुज्ञातविश्वेशदिदृक्षागमनोत्सुक ॥ १३

चण्डालाकारविश्वेशप्रश्नानुप्रश्नहर्षित ।
विश्वेशानुग्रहावाप्तभाष्यग्रथननैपुण ॥ १४

நர்மதை நதிக்கரையில் கோவிந்த முனிவரின் திருவடி ஸேவையைப் பெற்றவரே! கோவிந்த குருவிடமிருந்து மஹாவாக்ய உபதேசம் பெற்றவரே ! யோக சித்தியால் நர்மதை வெள்ளத்தைக் கமண்டலுவில் அடக்கியவரே! குருவின் ஆணைப்படி விசுவநாதரைக் காணச் செல்வதில் ஆர்வம் கொண்டவரே ! சண்டாளனின் உருவெடுத்த விசுவநாதரின் கேள்வி - தொடர் கேள்விகளால் மகிழ்ந்தவரே! விசுவேசுவரரின் அருளால் பாஷ்யமியற்ற வல்லமை பெற்றவரே (12-14)

राशीकृतौपनिषदयाथार्थ्यस्फुटभाष्यकृत् ।
यदूद्वहप्रोक्तगीतायाथातथ्यविवेचक ॥ १५

यदृच्छाकृतवाक्यार्थहृष्यत्सत्यवतीसुत ।
मन्दाकिनीझरीरम्यभाष्यपावितभूतल ॥ १६

मस्करित्वकृतस्वाम्बायज्ञस्थापितसत्पथ ।
त्रिरधीतात्मीयभाष्यसनन्दनसमाश्रय ॥ १७

குவித்த உபநிஷத்துகளின் உண்மையை விளக்குகிற பாஷ்யங்கள் இயற்றியவரே ! யதுகுலதிலகரான கிருஷ்ணன் உபதேசித்த கீதையின் தத்துவத்தை விளக்கியவரே ! எதேச்சையாக உபநிஷத் வாக்கியங்களின் விசார - வாத - விளக்கங்களால் ஸத்யவதியின் புதல்வரான வியாஸரை மகிழ்வித்தவரே ! அழகிய பாஷ்யமாகிய கங்கைப் பிரவாகத்தால் பூதலத்தைப் புனிதமாக்கியவரே ! துறவி என்ற நிலையிலிருந்து தாயின் ஈமச்சடங்கு செய்து நல்வழியை நிலை நிறுத்தியவரே ! மூன்று தடவை தனது பாஷ்யத்தைக் கற்ற ஸநந்தனருக்கு ஆதரவளித்தவரே ! (15-17)

कुकूलानलकूटस्थकुमारिलकृतानते ।
कर्मैकपथिकोद्दण्डमण्डनान्त्याश्रमप्रद ॥ १८

कञ्जयोन्यवतारश्रीसुरेश्वरसुदेशिक ।
राजताद्रिवरानीतरम्यस्फाटिकलिङ्गक ॥ १९

यत्नाभेद्यमहामौनवटुवादकसन्निधे ।
यथावत्तत्त्वविज्ञातृहस्तामलकसद्गुरो ॥ २०

உமிக்காந்தலிலிருந்த குமாரிலரால் வணங்கப் பெற்றவரே ! கருமமார்க்கத்திலேயே சென்று வந்த மண்டனருக்குத் துறவளித்தவரே ! பிரும்மாவின் மறுதோற்றமான ஸுரேசுவரனின் நல்லாசானே ! வெள்ளி மலையிலிருந்து அழகிய ஸ்படிக லிங்கங்கள் கொணர்ந்தவரே ! முயன்றும் மாற்ற முடியாத கடும் மௌனத்தில் ஆழ்ந்திருந்த பிரும்மசாரியைத்தன் அருகாமையால் பேச்சாளனுக்கியவரே ! தத்துவத்தை உள்ளபடி உணர்ந்த ஹஸ்தாமலகரின் நல்ல குருவே ! (18-20)

यथोक्तवृत्तनामाढ्यस्वकशिष्यसमाश्रित ।
रामेश्वरादिमेर्वन्तप्रतिष्ठापितसन्मत ॥ २१

ककुञ्जयमहायात्रापवित्रितमहीतल ।
महिताद्वैतसाम्राज्यरक्षादुर्गमहाग्र्यकृत् ॥ २२

मठस्थापितसच्छिष्यवृतमुक्तिनिकेतन ।
शारदास्थापनापूत ऋश्यशृङ्गगिरिस्थल ॥ २३

பாடிவந்த விருத்தத்தையே தன் பெயராகக் கொண்ட தோடகரால் நன்குபற்றப்பட்டவரே ! ராமேசுவரத்திலிருந்து மேருவரை தன் நல்ல மதத்தை நிலைக்கச் செய்தவரே ! திக்விஜயத்திற்கான பெருயாத்திரையால் பூதலத்தைப் புனிதப் படுத்தியவரே ! பெருமை பெற்ற அத்வைதப் பேரரசின் காவற்கோட்டையாகச் சிறந்த (காமகோடிபீட) மடத்தை நிறுவியவரே ! தன் மடத்தில் மடாதிபதியாக்கப் பெற்ற நற்சிஷ்யனால் தன் முக்தி ஸ்தானத்தைத் தாங்கச் செய்தவரே ! சாரதாதேவியை ஸ்தாபித்ததன் மூலம் ருச்ய சிருங்ககிரித் தலத்தைத் தூயதாக்கியவரே ! (21-23)

केदारेशप्रतिष्ठातः नेपालवरलिङ्गकृत् ।
चिदम्बरसभान्यस्तमोक्षलिङ्ग यतीश्वर ॥ २४

ऋष्यशृङ्गाश्रमन्यस्तभोगलिङ्ग महायशः ।
श्रीचक्रात्मकताटङ्कपोषिताम्बामनोरथ ॥ २५

काञ्च्यां श्रीचक्रराजाख्ययन्त्रस्थापनदीक्षित ।
भेरीपटहवाद्यादि राजलक्षणलक्षित ॥ २६

கேதாரேசனை ஸ்தாபித்தவரே ! சிதம்பர ஸபையில் மோக்ஷ லிங்கத்தை ஸ்தாபித்தவரே ! துறவித்தலைவரே ! ருச்யசிருங்காசிரமத்தில் போகலிங்கத்தை நிறுவியவரே ! பெரும்புகழ் கொண்டவரே! ஸ்ரீ சக்ர வடிவுள்ள தாடங்கத்தால் அம்பிகையின் விருப்பத்தை நிறைவேற்றியவரே ! காஞ்சியில் ஸ்ரீ சக்ரராஜமெனும் யந்திரத்தை ஸ்தாபித்ததில் முனைந்தவரே ! பேரீ, படஹவாத்யம் முதலிய ராஜலக்ஷணங்களால் அடையாளம் காட்டியவரே ! (24-26)

सर्वज्ञपीठाध्यारोहलुप्तसर्वज्ञसंशय ।
कैलासयात्रासंप्राप्तचन्द्रमौलिप्रपूजक ॥ २७

सौन्दर्यलहरीमुख्यबहुस्तोत्रविधायक ।
सत्यव्रतसमाख्यातकाञ्च्यन्तरितविग्रह ॥ २८

काञ्चीपुराभरणकामदकामकोटिपीठाभिषिक्तवरदेशिकसार्वभौम ।
सार्वज्ञ्यशक्त्यधिगताखिलमन्त्रतन्त्रचक्रप्रतिष्ठितिविजृम्भितचातुरीक ॥

ஸர்வஜ்ஞ பீடமேறியதனுல் ஸர்வஜ்ஞாத்மா என்ற சிஷ்யனின் ஐயங்களைத் தீர்த்தவரே ! கைலாஸ யாத்திரையில் கிட்டிய சந்திர மௌளியை (யோகலிங்கத்தை) வழிபடுபவரே ! ஸௌந்தர்ய லஹரியை முன்னதாகக் கொண்ட பல துதிகளை இயற்றியவரே ! ஸத்யவிரதமெனும் காஞ்சியில் தன் பூத உடலை மறைத்துக் கொண்டவரே ! காஞ்சீ புரத்தின் அணியாக உள்ளதும் விரும்பியதை அளிப்பதுமான காமகோடி பீடத்தில் முதல் ஆசார்ய சக்ரவர்த்தியாக பட்டாபிஷேகம் பெற்ற குருப்பேரரசே ! எல்லாமறிந்த நிலையாகிய சக்தியால் மந்திரங்கள் தந்திரங்கள் ஸ்ரீ சக்ரபிரதிஷ்டை இவற்றில் தன் வல்லமையைப் பெரிதும் வெளிப்படுத்தியவரே ! (27-29)

पराक्स्वामिन् ! जय विजयीभव ॥

பராக் ஸ்வாமின் ! ஜய விஜயீபவ !

जय गोविन्दभगवत्पाद - पादाब्ज षट्पद ।
जय जीवपराभेद - वावदूक जगद्गुरो ॥ ३०

जय भो बौद्धपाषण्ड विध्वंसन विचक्षण ।
जय वेदान्तसिद्धान्त - सिद्धाञ्जन - महामते ॥ ३१

पराक् स्वामिन् ! जय ! विजयी भव !

கோவிந்த பகவத்பாதரின் திருவடித் தாமரையை மொய்த்து நிற்கிற வண்டானவரே! ஜீவாத்ம-பரமாத்மாக்களிடையே வேற்றுமையின்மையை வாதாடி விளக்குபவரே ! உலகின் குருவே ! ஜய ! வேதாந்தத்தின் ஸித்தாந்தத்தை மைதீட்டிய கண்களால் உற்றுப் பார்க்கிற பேரறிஞரே ! பார்க் ! ஸ்வாமிந் ! ஜய ! விஜயீபவ ! (30-31)



# प्रथिता गुरुपरम्परा

## व्यासवन्दनम्

नमः श्रुतिशिरःपद्मषण्डमार्ताण्डमूर्तये ।
बादरायणसंज्ञाय मुनये शमवेश्मने ॥ १

*"புகழ் பெற்ற குருபரம்பரை - வியாஸர்"*

வேதத்தின் தலைப்பகுதியான உபநிஷத்துகளாகிற தாமரைக் குவியலை மலரச் செய்பவரும் பதரீயில் (வியாஸகுகையில்) வசிப்பதால் பாதராயணர் என்ற பெயர் கொண்டவரும் மனவடக்கத்தின் இருப்பிடமுமான வியாஸருக்கு வந்தனம். (1)

ब्रह्मसूत्रकृते तस्मै वेदव्यासाय वेधसे ।
ज्ञानशक्त्यवताराय नमो भगवतो हरेः ॥ २

பகவானான ஹரியின் ஜ்ஞான சக்தியின் அவதாரமும் பிரம்ம ஸூத்ரம் இயற்றிய வரும் வேதங்களை வகுத்ததால் வேதவியாஸரான வரும் படைப்பவரும் (விஷ்ணுவும்) ஆன வியாஸருக்கு வந்தனம். (2)

यदीयसूत्रविलसच्छास्त्रनावा भवाम्बुधिम् ।
सन्तस्तरन्ति तं वन्दे पाराशर्यमहर्निशम् ॥ ३

பராசரரின் புதல்வரான வியாஸரை வணங்குகிறேன். இவரது ஸூத்ரங்களால் உருவாகிய சாரீரக சாஸ்திரம் எனும் ஓடத்தின் உதவி கொண்டு நல்லோர் பிறவிக்கடலைக் கடக்கின்றனர். (3)

कृष्णद्वैपायनं व्यासं सर्वभूतहिते रतम् ।
वेदाब्जभास्करं वन्दे शमादिनिलयं मुनिम् ॥ ४

கிருஷ்ணரும் தீவில் வசிப்பவரும் (த்வைபாயனரும்) உயிரினமனைத்தின் நலத்தில் ஆர்வமிக்கவரும் வேதமெனும் தாமரைக்கு சூர்யனும் மனவடக்கம் முதலிய நற்குணங்களின் இருப்பிடமும் முனிவருமான வியாஸரை வணங்குகிறேன். (4)

# व्यासशङ्करौ

शङ्करं शङ्कराचार्यं केशवं बादरायणम् ।
सूत्रभाष्यकृतौ वन्दे भगवन्तौ पुनः पुनः ॥ ५

***வியாஸரும் சங்கரரும்*** - சிவனாகிய சங்கராசார்யரையும் விஷ்ணுவாகிற பதரீவாஸரான வியாஸரையும் அடிக்கடி வணங்குகிறேன். அவர்களிருவரும் பிரம்மஸூத்ரத்தையும் அதன் பாஷ்யத்தையும் இயற்றிய பகவானின் ஸ்வரூபம். (ஹரிஹரஸ்வரூபர்கள்) (5)

पूर्णज्ञानाय निर्भेदपरमानन्दमूर्तये ।
व्यासशङ्कररूपाय श्रीपरब्रह्मणे नमः ॥ ६

பூர்ணஜ்ஞான வடிவமும் வேறுபாடற்ற பேரானந்த வடிவமும் வியாஸர் சங்கரர் என்ற இருவடிவங்கள் ஏற்றதுமான பரப்பிரும்மத்திற்கு வந்தனம். (6)

हरिहरयोरवतारावाकलये व्यासशङ्करौ हृदये ।
उदधारि कुमतिशङ्कापङ्कातङ्काज्जरद्गवी याभ्याम् ॥ ७

கிழட்டுப் பசுவான வேதவாக்கு புத்தி கெட்டவரின் ஐயப்பாடாகிற சேற்றில் மூழ்கியிருந்தது. ஹரி - ஹரர்களின் அவதாரங்களான வியாஸரும் சங்ரரரும் அந்தப் பசுவைச் சேற்றிலிருந்து வெளியே கொணர்ந்தனர். அவ்விருவரையும் உள்ளத்தில் தியானிக்கிறேன். (7)

विष्णवे व्यासरूपाय ब्रह्मसूत्रकृते नमः ।
महेशाय च तद्भाष्यकृते शङ्कररूपिणे ॥ ८

வியாஸர் வடிவில் பிரம்ம ஸூத்ரம் எழுதிய விஷ்ணுவிற்கும் சங்கரர் வடிவில் அதற்குப் பாஷ்யம் இயற்றிய சிவனுக்கும் வந்தனம். (8)

# गौडपादाः

परिव्राजामाद्याः परमगुरवः शङ्करयतेः

प्रणेतारः प्रौढं गहनतरमाण्डूक्यविवृतेः ।

परानन्दाभोगे पटुतरहृदो गौडचरणाः

पुरस्तान्नः स्फूर्तिं विदधतु चिदानन्दमधुराम् ॥ ९

*கௌடபாதர்* - பரிவிராஜகத் துறவிகளில் முதல்வர், சங்கரர் என்ற துறவிக்கு பரமகுரு, மிக ஆழ்ந்த கருத்துள்ள மாண்டூக்ய விவரணத்தை இயற்றியவர், பேரானந்த அனுபவத்தில் வல்லமைமிக்க உள்ளம் கொண்டவர். இந்த கௌடபாதர் பேருணர்வாலும் பேரானந்தத்தாலும் இனிய காட்சியை நம்முன் வழங்கட்டும். (9)

जीवन्मुक्तप्रथमं दुर्वादिव्रातदुर्मदापहरम् ।

सेवे गौडपदं तं प्रवरं विद्यावदातधिषणानाम् ॥ १०

ஜீவன்முக்தர்களில் முதல்வர், துர்வாதிகளின் கூட்டத்தின் கெட்ட செருக்கைப் போக்குபவர். பிரும்ம வித்யையால் புகழ்பெற்ற பேரறிவாளர்களின் முன் நிற்பவர். அந்த கௌடபாதரை வழிபடுகிறேன். (10)

चरणं गौडपादस्य शरणं करवाण्यहम् ।

श्रुत्यन्तसारसर्वस्वनिष्यन्दा यस्य सूक्तयः ॥ ११

கௌடபாதரின் நல்லுரைகள் ஸாரமனைத்தின் பொழிவானவை. அவரதுசரணத்தைச் சரணடைகிறேன். (11)

प्रज्ञावैशाखवेधक्षुभितजलनिधेर्वेदनाम्नोऽन्तरस्थं

भूतान्यालोक्य मग्नान्यविरतजननग्राहघोरे समुद्रे ।

कारुण्यादुद्दधारामृतमिदममरैर्दुर्लभं भूतहेतोः

यस्तं पूज्याभिपूज्यं परमगुरुममुं पादपातैर्नतोऽस्मि ॥ १२

ஓயாத பிறவி வரிசை எனும் முதலைகளால் அச்சுறுத்துகிற கடலில் மக்கள் மூழ்கியுள்ளதைக் கண்டு வேதமெனும் கடலை பிரஜ்ஞானம் என்ற ஆத்மதத்வ அறிவாகிற மத்தால் கடைந்து அதனுள்ளிருந்த அமுதமாகிற பிரும்மஜ்ஞானத்தை மக்களின் நலனுக்காக வெளிக் கொணர்ந்தார். இந்த அமுதம் தேவருக்கும் அரிதானது. அந்த- வழிபாட்டிற்குரியவராலும் மிகவும் பக்தியுடன் வழிபடப்பெற்ற பரமகுருவான கௌடபாதரைத் திருவடிகளில் விழுந்து வணங்குகிறேன். (12)

यत्प्रज्ञालोकभासा प्रतिहतिमगमत् स्वान्तमोहान्धकारः

मज्जोन्मज्जच्च घोरे ह्यसकृदुपजनोदन्वति त्रासने मे ।

यत्पादावाश्रितानां श्रुतिशमविनयप्राप्तिरग्र्या ह्यमोघा

तत्पादौ पावनीयौ भवभयविनुदौ सर्वभावैर्नमस्ये ॥ १३

அவரது அறிவுப் பார்வையொளியால் உள்ளத்தில் மோகம் எனும் இருள் தடைபெற்று அகன்றது. என்னைப் பயமுறுத்துகிற பயங்கரமான பிறவிக் கடலில் அந்த இருள் என்னை மூழ்கடித்தது. இவரது திருவடிகளை அணுகியவருக்கு சிரவணம் மனவடக்கம் பணிவு முதலியவை பழுதின்றி சித்திக்கும். மிகப்புனிதமானவையும் பிறவிப் பயத்தைப் போக்குபவைமான அவரது திருவடியுகளை முக்கரணங்களாலும் வணங்குகிறேன். (13)

## गोविन्दभगवत्पादाः

सततं निगदन् रसेन योऽसौ जय गोविन्द जयेति सूक्तिमेकाम् ।

श्रितमौनमभूद्यदन्यवादे जयगोविन्दमुनिं तदाहुरेनम् ॥ १४

எப்போதும் உள்ளமார்ந்து ''ஜய ! கோவிந்த ! ஜய ! என்ற சொல்லை மட்டும் கூறி, மற்றது பேசாமல் மௌனமாக இருந்ததால், அவர் ***ஜய கோவிந்தமுனி*** என வழங்கப்பட்டார். (14)

वन्दे गोविन्दपादाब्जचिन्तासन्तुष्टचेतसम् ।

गोविन्दभगवत्पूज्यपादमादीनवच्छिदम् ॥ १५

கோவிந்தனின் திருவடித் தாமரைகளைப் பற்றிய சிந்தனையால் மகிழ்ந்த உள்ளம் கொண்டவரும் தீன நிலையை அகற்றுபவருமான கோவிந்த பூஜ்ய பகவத் பாதரை வணங்குகிறேன். (15)

रेवातीरनिवासी पविरज्ञानाद्रिभेदने सुमहान् ।
गोविन्दार्यो दद्यात् श्रीविद्यां तारिणीं भवाम्भोधेः ॥ १६

ரேவாநதிக்கரையில் வசிப்பவரும் அறியாமை எனும் மலையைத் தூளாக்குவதில் மிகப்பெரிய வஜ்ராயுதமுமான கோவிந்தர் என்ற பெரியவர் பிறவிக் கடலைத் தாண்டச் செய்கிற சீர்மிக்க பிரும்ம வித்யையை அருளட்டும். (16)

सर्ववेदान्तसिद्धान्तगोचरं तमगोचरम् ।
गोविन्दं परमानन्दं सद्गुरुं प्रणतोऽस्म्हम् ॥ १७

எல்லா உபநிஷத் ஸித்தாந்தங்களிலும் தென்படுபவரும் புலப்படாதவரும் பேரானந்தமுமான ஸத்குரு கோவிந்தரை வணங்குகிறேன். (17)

## नारायणादि गुरुपरम्परानन्तर्गताः
## प्राक्तनाद्वैताचार्याः

आचार्यं प्रणमामि सादरमहं तं ब्रह्मनन्दीति यः
प्रख्यातो मुनिरत्रिवंश्य उदितः संक्षेपशारीरके ।
छान्दोग्योपनिषच्च येन विवृता वाक्यैर्हि सूत्रात्मभिः
यं ग्रन्थेषु परः पुनः पुनरपि ब्रूते प्रमाणं परम् ॥ १८

***நாராயணரிடமிருந்து தொடங்கிய குருபரம்பரையில்***

***"இடம் பெறாத அத்வைத ஆசாரியர்கள்"***

"பிரும்மநந்தீ" என்ற முனிவர் அத்ரிவம்சத்தினர். ஸம்க்ஷேபசாரீரகத்தில் இவரது நூல் குறிப்பிடப் பெறுகிறது. சாந்தோக்ய உபநிஷத்திற்கு ஸூத்ரவடிவான வாக்யங்களால்

விவரணம் எழுதியுள்ளார். அடிக்கடி இவரது நூல் எடுத்துக்காட்டாக இடம் பெறுகிறது (18)

छान्दोग्योपनिषद्वाक्यग्रन्थकर्तॄन्नुमो वयम् ।
अद्वैतनिष्ठानाचार्यान् आत्रेयब्रह्मनन्दिनः ॥ १९

சாந்தோக்ய உபநிஷத்திற்கு வாக்ய உரை எழுதியவரும் அத்வைதத்தில் நிலைத்தவருமான ஆத்ரேய பிரும்ம நந்தி ஆசாரியரை வணங்குவோம். (19)

आचार्यान्द्रविडाख्यया सुविदितान् स्तौमि प्रमाणीकृतान्
श्रीमच्छङ्करदेशिकप्रभृतिभी रामानुजाद्यैरपि ।
छान्दोग्योपनिषत्प्रमेयविवृतिर्यैर्ब्रह्मनन्दीरिता
वाक्याख्याऽतिगभीरसूत्रसरणिर्भाष्येण संभूषिता ॥ २०

''திரவிடாசாரியர்'' என்பவர் பிரும்ம நந்தி எழுதிய சாந்தோக்ய உபநிஷத்தின் விவரணத்தின் மீது உரை (பாஷ்யம்) எழுதியுள்ளார். சங்கரபகவத் பாதர்களும் ராமானுஜர் முதலானோரும் பிரமாணமாக இவரது நூலை எடுத்துக்காட்டியுள்ளனர். (20)

छान्दोग्योपनिषद्वाक्यभाष्यकर्तॄन्नुमो वयम् ।
अद्वैतभावानाचार्यान् द्रविडाचार्यसंज्ञितान् ॥ २१

சாந்தோக்ய உபநிஷத் வாக்ய உரைக்கும் பாஷ்யம் எழுதிய திரவிடாசார்யர் என்ற அத்வைதத்தில் நிலைத்த கருத்துள்ள ஆசாரியர்களைத் துதிப்போம். (21)

आचार्यं सुन्दरं पाण्ड्यं नमामः प्राक्तनं गुरुम् ।
पूर्वोत्तरे च मीमांसे वार्तिकैर्येन मण्डिते ॥ २२

பூர்வ - உத்தர மீமாம்ஸா ஸூத்ரங்களுக்கு வார்த்திகம் எழுதிய ஸுந்தர பாண்டியர் என்ற முன்னுள் ஆசாரியரை வணங்குவோம். (திரவிட ஆத்ரேய தர்சனம்) (22)

प्रभवात्परमार्थसंग्रहाच्च प्रणयस्थानममुष्य सिद्धशिष्यः ।
विरतक्षितिरक्षणो विरक्त्या हरिरंहो मम दंहतां स्वशक्त्या ।। २३

சந்திர சர்மாவின் புதல்வரும் (அவர் கோவிந்த பகவத்பாதரானபின்) அவரிடம் பெரும் பொருளான பிரும்ம தத்வத்தைக் கற்றவரும் நிலைபெற்ற சிஷ்யரும் ராஜ்ய நிர்வாகத்திலிருந்து ஒதுங்கி கோவிந்தரை அண்டியவருமான (பர்த்ரு) ஹரி என் பாபத்தை தன் சக்தியால் நீக்கட்டும். (ஜகத்குரு ரத்னமாலாஸ்தவம்) (23)

द्रविडत्रयमात्रेयत्रयं गौडत्रयं तथा ।
अद्वैतबोधसिद्ध्यर्थं नमामः करणैस्त्रिभिः ।। २४

திரவிடாசார்யர், சங்கர பகவத்பாதர், அப்பயதீக்ஷிதர் (அபிநவ திரவிடசார்யரான பால கிருஷ்ணாநந்த ஸரஸ்வதீ என்பர்) என திரவிடர் மூவர். தந்தாத்ரேயர், பிரும்மநந்தீ, சங்கர பகவத்பாதர் என ஆத்ரேயர் மூவர். கௌடபாதர் ஸுரேச்வரர், கௌடப் பிரும்மானந்த ஸரஸ்வதீ என கௌடர் மூவர். இவர்களை அத்வைதப் பிரும்மஜ்ஞானம் நிலைபெற உடல், வாக்கு. மனம் என்ற முக்கரணங்களாலும் வணங்குவோம். (24)

# गुरुपरम्परायां संज्ञाभेदः

नारायणः पद्मभवो वसिष्ठः शक्तिश्च तत्पुत्रपराशरश्च ।
व्यासः शुकश्चेति गुरुक्रमोऽयं प्रसिद्ध आस्ते पितृपुत्ररीत्या ।। २५

ज्ञानशक्तिबलैश्वर्यवीर्यतेजोभिरन्वयात् ।
भगवत्संज्ञया चेमे स्मर्यन्ते गुरुपुङ्गवाः ।। २६

***"குருபரம்பரையினரின் பட்டப்பெயர்கள்"***

நாராயணர், பிரும்மா, வஸிஷ்டர், சக்தி, பராசரர், வியாஸர், சுகர், என்ற குருவரிசை தந்தை - புதல்வர் என்ற ரீதியில் அமைந்தது.

(நாராயணனும் பிரும்மாவும் தேவர்கள், வஸிஷ்டர் முதலானோர் ருஷிகள்) இவர்களே பகவான் எனக்குறிப்பிடுவர். ஜ்ஞானமும் ஆற்றலும் வலிவும் பேராண்மையும் வீர்யமும் ஒளியும் ''பகம்'' எனப்படுபவை. இவற்றை இயல்பாகக் கொண்ட இவர்கள் பகவான் எனப்படுவர். (25-26)

परम्परा शुकाद्या हि गुरुशिष्यक्रमागता ।
शुकशिष्यः परिव्राजामाद्यो गौडश्च जन्मना ॥ २७

महत्त्वार्थकपादाख्याप्रख्यातः परमो गुरुः ।
भगवत्पादसंज्ञाकौ गोविन्दगुरुशङ्करौ ॥ २८

சுகரிடம் தொடங்கிய பரம்பரை குரு - சிஷ்யன் என்ற ரீதியில் அமைந்தது. பிறப்பால் கௌட தேசத்தவரான சுகரின் சிஷ்யரான கௌடர் முதல் துறவி. கௌடர் முதல் அனைவரும் துறவிகளே. மஹான் என்பதைக் குறிப்பிட பாதர் (சரணர், பதர்) எனப்பட்டப் பெயர் கொண்டவர். கௌடர், கௌடபாதர், கௌடபதர், கௌடசரணர் என்பர். கோவிந்த குருவும் சங்கரரும் பகவத்பாதர் எனப்படுவர். (27-28)

भगवान्पद्यते येन गम्यते बोध्यतेऽपि च ।
इति तौ भगवत्पादाभिख्या साऽन्वेति सार्थिका ॥ २९

பகவானை பிரும்மத்தை, ஹரிஹரன் முதலானோரை, இவர்கள் பற்றச் செய்கின்றனர். உணரச் செய்கின்றனர். இவர்களைப் பற்றிப் போதிக்கின்றனர். என இவர்களை பகவத்பாதர் என (கோவிந்த பகவத்பாதர், சங்கரபகவத் பாதர் என) குறிப்பிடுவர். (29)

अगताध्वप्रापणेन पादाविव गुरूत्तमः ।
शास्त्रान्तरानवगतब्रह्मबोधोपकारकः ॥ ३०

இதுவரை சென்றிராத வழியைக் காண்பிக்கவே பாதங்கள் நடக்கின்றன. இந்த குரு மற்ற சாஸ்திரங்களால் உணரப் பெருத

பிரும்ம நிலையை உணர உதவியவர் எனவும் பகவத்பாதராகிருர். (30)

अज्ञानान्तर्गहनपतितानात्मविद्योपदेशैः
त्रातुं लोकान् भवदवशिखातापपापच्यमानान् ।
त्यक्त्वा मौनं वटविटपिनो मूलतो निस्सरन्ती
शम्भोर्मूर्तिश्चरति भुवने शङ्कराचार्यरूपा ॥ ३१

அறியாமை எனும் இருண்ட பாதையில் விழுந்துள்ள மக்கள் பிறப்பிறப்பெனும் காட்டுத் தீயால் எரிக்கப்படுகின்றனர். இவர்களைக் காக்கவே, தான் கடைபிடித்த மௌனத்தை விட்டு ஆலமரத்தடியிலிருந்து வெளியேறிய சிவனது தக்ஷிணாமூர்த்திக் கோலம் உலகில் சங்கராசாரியர் வடிவில் நடமாடுகிறது. (31)

चरतेर्लट्प्रयोगोऽयं भासते सार्थको, यतः ।
शङ्करस्थापितानेकपीठाधिपतयः समे ॥ ३२

प्रथन्ते शङ्कराचार्याः भिन्नदीक्षाभिधा अपि ।
तन्मनस्कास्तदालापास्तद्विचेष्टास्तदात्मकाः ॥ ३३

तद्गुणानेव गायन्तः तदभेदं विवृण्वते ।
एतेषां शङ्कराद्भेदं कञ्चिन्नोपलभामहे ॥ ३४

श्रीशङ्करादविच्छिन्नसंप्रदायप्रवर्तकान् ।
अद्वैतस्थापने धर्मरक्षायां बद्धकङ्कणान् ॥ ३५

मौलप्राग्दक्षिणोदीच्यपश्चिमाम्नायपीठगान् ।
प्रणुमस्तान्परिव्राजः परहंसान् गुरूत्तमान् ॥ ३६

நடமாடுகிருர் என நிகழ்காலச் சொல் பொருள் செறிந்தது. சங்கரர் நிறுவிய எல்லா பீடங்களின் தலைவர்களான ஆசாரியர்கள்

தனிப்பெயர் கொண்டிருந்தாலும் சங்கராசாரியர் என்றே பெரிதும் மதிக்கப் படுகின்றனர். சங்கரரது மனம், அவரது பேச்சு, அவரது நடைமுறை, அவரது தோற்றம், அவரது புகழ்பாடுதலே கடமை என்ற உணர்வு என சங்கரரிடமிருந்து வேறுபாடு எதுவும் இவர்களிடம் காணப் பெறவில்லை. இவர்களது பரம்பரை தொடர்ந்து இடைவெளியற்று சங்கரரது கொள்கையையும் நடைமுறையையும் பின்பற்றுகின்றது. அத்வைதத்தை நிலை பெறச் செய்யவும் அறநெறியைக் காப்பதிலும் கங்கணம் கட்டிக் கொண்டவர்கள். மூலாம்நாயம், பூர்வாம்நாயம், தக்ஷிணாம்நாயம், பச்சிமாம்நாயம், உத்தராம்நாயம் என்ற பீடங்களில் அமர்ந்து மக்களுக்கு குருவாக நின்று வழிகாட்டுகிற பரமஹம்ஸ பரிவ்ராஜகர்களை வணங்கி நிற்போம். (ஸ்ரீ சங்கர விஜய மகரந்தம்) (32-36)

जय जय शङ्कर हर हर शङ्कर

ஜய ஜய சங்கர ஹர ஹர சங்கர

।। சுபம் ।।





தொகுப்பின் மூல நூல்கள்

ब्रह्मसूत्रभाष्यम् - ஸ்ரீ மஹாபெரியவாள்

ஷஷ்ட்யப்தபூர்த்தி வெளியீடு 1954

श्रीशङ्करविजयमकरन्दः 1978

आचार्यप्रशास्तिमकरन्दः 1980

கிடைக்குமிடம் :

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீமடம் ஸம்ஸ்தானம்

நெ.1, சாலைத் தெரு, காஞ்சீபுரம் - 631 502

2009

Printdd at : V.K.N. Enterprises, Cell : 98402 17036